# ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமி கோயில், திருமலை.

## தினசரி பூசைகள், தர்மதரிசனங்கள் பற்றிய கால அட்டவணை

### சனி, ஞாயிறு, திங்கள், செவ்வாய் கிழமைகளில்

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 4-00 | முதல் | 4-30 | வரை | சுப்ரபாதம் |
| 4-30 | ,, | 5-30 | ,, | விஸ்வரூப சர்வதரிசனம் |
| 5-30 | ,, | 6-00 | ,, | சுத்தி முதலியவைகள் |
| 6-00 | ,, | 7-00 | ,, | தோமால சேவை (ஆர்ஜிதம்) |
| 7-00 | ,, | 7-30 | ,, | தங்க வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம |
| 7 30 | ,, | 8-30 | ,, | முதல் அர்ச்சனை (ஆர்ஜிதம்) |
| 8-30 | ,, | 9-00 | ,, | முதல் மணி, பலி, சாத்துமுறை |
| 9-00 | ,, | 1-00 | மதியம் | ஸர்வ தர்சனம் |
| 1-00 | ,, | 2-00 | ,, | சுத்தி 2-வது அர்ச்சனை (ஏகாந்தம) 2-வது மணி |

மாலை

| | | | | |
|---|---|---|---|---|
| 2-00 | ,, | 8-00 | ,, | ஸர்வ தரிசனம |
| 8-00 | ,, | 9-30 | ,, | சுத்தி இரவு கைங்கர்யம், இரவு மணி |
| 9-00 | ,, | 10-00 | ,, | சுத்தி முதலிவைகள் |
| | | 10-00 | | ஏகாந்த சேவை (ஆர்ஜிதம்) |

### புதன் கிழமைகளில (சஹஸ்ர கலசாபிஷேகம் நடைபெறுவதால்)

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 4-00 | ,, | 4-30 | ,, | சுபரபாதம் |
| 4-30 | ,, | 5-30 | ,, | விஸ்வரூப ஸர்வ தரிசனம் |
| 5-30 | ,, | 6-00 | ,, | சுத்தி முதலியவை |
| 6-00 | ,, | 7-00 | , | தோமால சேவை (ஆர்ஜிதம்) |
| 7-00 | ,, | 7-30 | ,, | தங்க வாயிலில் கொலுவு. பஞ்சாங்க ஸ்ரவணம |
| 7-30 | ,, | 8-30 | ,, | முதல் அர்ச்சனை (ஆர்ஜிதம்) |
| 8-30 | ,, | 9-00 | ,, | முதல் மணி, பலி, சாத்துமுறை |
| 9-00 | ,, | 10-00 | ,, | சஹஸ்ர கலசாபிஷேகத்திற்கு ஏற்பாடுகள் |
| 10-00 | ,, | 1-00 | மதியம் | சஹஸ்ர கலசாபிஷேகம் |
| 1-00 | ,, | 2-00 | ,, | சுத்தி இரண்டாவது அர்ச்சனை (ஏகாந்தம்) 2-வது மணி |

மாலை

| | | | | |
|---|---|---|---|---|
| 2-00 | ,, | 8-00 | ,, | ஸாவ தரிசனம் |
| 8-00 | ,, | 9-30 | ,, | சுத்தி இரவு கைங்கர்யம், இரவுமணி முதலியவைகள் |
| 9-30 | ,, | 10-00 | ,, | சுத்தி முதலியவைகள் |
| | | 10-00 | | ஏகாந்த சேவை (ஆர்ஜிதம்) |

### வியாழக்கிழமைகளில (திருப்பாவாடை உத்ஸவம நடைபெறுவதால்)

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 4-00 | ,, | 4-30 | ,, | சுபரபாதம் |
| 4-30 | ,, | 5-30 | ,, | விஸ்வரூப தரிசனம் |
| 5-30 | ,, | 6-00 | ,, | சுத்தி முதலியவை |
| 6-00 | ,, | 7-00 | ,, | தோமாலசேவை (ஆர்ஜிதம்) |
| 7-00 | ,, | 7-30 | ,, | தங்க வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம |
| 7-30 | ,, | 8-30 | ,, | முதல் அர்ச்சனை (ஆர்ஜிதம்) |
| 8-30 | ,, | 9-00 | ,, | முதல் மணி, பலி, சாத்துமுறை |
| 9-00 | ,, | 11-00 | ,, | சாலிமபு, சுத்தி 2-வது அர்ச்சனை (ஏகாந்தம) திருப்பாவாடை, அலங்காரம, மணி முதலியவை, |
| 11-00 | ,, | 5-00 | மாலை | ஸாவ தரிசனம் |
| 5-00 | ,, | 5-30 | ,, | சுத்தி முதலியவை |
| 5-30 | ,, | 7-00 | ,, | பூலங்கி சாத்துபடி |
| 7-00 | ,, | 8-00 | ,, | இரவுகைங்கர்யம, இரவுமணி |
| 8-00 | ,, | 9-30 | ,, | பூலங்கி சேவை (ஆர்ஜிதம) |
| 9-30 | ,, | 10-00 | ,, | சுத்தி முதலியவை |
| | | 10-00 | | ஏகாந்த சேவை (ஆர்ஜிதம்) |

### வெள்ளிக் கிழமைகளில (அபிஷேகம நடைபெறுவதால்)

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 3-00 | ,, | 3-30 | ,, | சுபரபாதம |
| 3-30 | ,, | 5-00 | ,, | விஸ்வரூப ஸாவ தரிசனம் |
| 5-00 | ,, | 7-00 | ,, | சாலிமபுமு, நித்ய கட்டளையும், கைங்கர்யங்களும் (ஏகாந்தம) |
| 7-00 | ,, | 9-00 | ,, | அபிஷேகம |
| 9-00 | ,, | 11-00 | ,, | அபிஷேகானந்தார தரிசனம (ஆர்ஜிதம) |
| 11-00 | ,, | 12-30 | மதியம் | சமர்ப்பணம் |
| 12-30 | ,, | 2-00 | மாலை | தோமால சேவை அர்ச்சனை (தனி) மணி, பலி, சாத்துமுறை |
| 2-00 | ,, | 8-00 | ,, | ஸாவ தரிசனம் |
| 8-00 | ,, | 9-30 | ,, | சுத்தி, இரவுகைங்கர்யங்கள், இரவு மணி |
| 9-30 | ,, | 10-00 | ,, | சுத்தி முதலியவை |
| | | 10-00 | | ஏகாந்த சேவை (ஆர்ஜிதம்) |

**குறிப்பு :** விழாநாட்களின்போதும், சிறப்பு நிகழ்ச்சிகளின் போதும மேற்கூறிய நிகழ்ச்சிநிரல்கள் தேவையின் பொருட்டு மாற்றப்படும.



''இடத்துறை மாதரோ டிருடம் பென்றும்
நடததினே நள்ளிருள் நவிற்றினே யென்றும்
புலியத ளென்பொடு புனேந்தோ யென்றும்
பலிதிரி வாழ்க்கை பயின்றே யெனறும்
அருவமு முருவமு மாறு யென்றும்
திருவமர் மாலொடு திசைமுகன் என்றும்
உளனே யென்றும இலனே என்றும்
தளரா னென்றும் தளர்வோ னென்றும்
ஆதி யென்றும் மசோகின னென்றும
போதியிற் பொலிந்த புராண னென்றும
இன்னவை முதலாத் தாமறி யளவையுன்
மன்னிய நூலின் பன்மையுள் மயங்கிப
பிணங்கு மாந்தர் பெற்றிமை நோக்கி
அணங்கிய வவ்வவர்க் கவ்வவை யாகியடையப்
பற்றிய பளிங்குபோலும்
ஒற்றிமாநக ருடையோ யுருவே''

(பட்டினத்தடிகள்)






# ஸப்தகிரி


மலர்: 9 பிப்ரவரி 1979 இதழ் 9

தனிப்பிரதி 50 காசு.
வருடச் சந்தா ரூ. 6


## உள்ளுறை


| | | பக்கம் |
|---|---|---|
| ஆசிரியர் உரை | | 3 |
| பொறுப்பாண்மைக்குழு முடிவுகள் | .. | 4 |
| கார்முகில் | ... | 5 |
| தில்லையில் நந்தனாரும் குலசேகரரும் | | 7 |
| இந்தியப் பண்பாடும் சமஸ்கிருதமும் | ... | 9 |
| சரணாகதி தத்துவம் | ... | 11 |
| அன்னமய்யா கீர்த்தனை | .. | 12 |
| கீதை காட்டும் நல்வழி | ... | 13 |
| அனுமன் கதை | ... | 17 |
| வில்லிபுத்தூர் வேயர் பயந்த விளக்கு | ... | 21 |
| இறைவனுக்கும் உயிர்க்கும் உள்ள இணக்கம் | ... | 25 |
| திருவேங்கடவனின் திருவருள் தேவி | ... | 29 |
| முக்கவி கண்ட காப்பியம் | ... | 35 |
| செய்திச் சுருக்கம் | ... | 37 |
| ராசி பலன் | ... | 39 |



சிறப்பாசிரியர்:
திரு. பி. வி. ஆர். கே. பிரஸாத்,
I.A.S.,
செயலாட்சித்தலைவர்,
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

ஆசிரியர்:
திரு. கே. சுப்பாராவ், எம். ஏ.
தி. தி. தேவஸ்தானம்,
திருப்பதி.

அச்சிடுபவர்:
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி. தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

முழு விவரங்களுக்கு,
Marketing Officer,
Publication Section,
T. T. D. Press Compound,
TIRUPATI-517501.


அட்டைப்படம்: 'அதிவோ அல்லதிவோ ஹரிவாஸமு' எனும் அன்னமய்யா கீர்த்தனைக்கு திரு. பாப்பு வரைந்த சித்திரம்.

# ஆசிரியர் உரை

கடந்த சில நாட்களாகவே ஆங்கிலம் மற்றும் தமிழ் நாளேடுகளிலும், திங்களேடுகளிலும் திருமலை திருப்பதி தேவஸ்தான நிருவாகத்தினைப்பற்றி விமர்சித்து பல செய்திகள் வெளி வந்து கொண்டிருக்கின்றன. நாள் ஒன்றிற்கு சுமார் 15000 யாததிரிகர்களுக்குத் திருமலையில இறைவனின் தரிசனம் கிடைக்கச்செய்ய தகுந்த ஏற்பாட்டினை மேற்கொண்டு வரும் தேவஸ்தானத்தினைப் பாராட்டி எழுதும் பததிரிகைகளுக்கு எங்கள் நன்றியைத் தெரிவிக்கும் அதே தருணத்து, தேவஸ்தான நிருவாகத்தினை குறைகூறும் பத்திரிகைகளுக்குப் பதிலளிக்கும் வகையிலும், அப்பத்திரிகை வாசகர்களுக்கு உண்மைகளை எடுத்துக் கூறுவதற்கும் மேலாண்மை கடமைப்பட்டுளளது என்பதையும நாங்கள மறககவில்லை. அவை கூறும் முறைபீடுகள் நியாயமாக இருக்கும் பட்சத்து, அககுறைகளை சரி பார்த்து, யாத்திரிகப் பொது மக்களுக்கு உதவும் வகையில் பல முயற்சிகளை மேற்கொள்ள அப்பத்திர்கைகள் மேலாண்மைக்கு வழிகாட்டிகளாக அமையும்; அவவாறு பல முறை அமைந்தும் உள்ளன. ஆனால் உண்மைக்குப் புறம்பாக, நிகழ்ச்சிகளை பெரிதுபடுத்தி அவற்றின்முலம தங்களை விளம்பரப்படுத்திக் கொண்டு தங்களை வளர்த்துக் கொள்ளும் சில நபர்களும் உண்டு என்பதை மறததல் கூடாது. அவர்களை இனங்காட்ட வேண்டுமென்பது எங்கள் நோக்கமல்ல. அவர்களுடைய எழுத்துக்களை நம்பி, தேவஸதானத்தைப் பற்றி தவறாகக் கருதும் பொதுமக்களும் சிலர் இருக்கலாம். அவர்களுக்கு உண்மை நிலை எடுத்துக்காட்டவே இததலையங்கம்.

சில மாதங்களுக்கு முன்பு, ஒரு வார இதழில் வெளியிடப்பட்ட கட்டுரையில், தி. தி. தேவஸதான ஊழியர்கள் மட்டுமல்ல, தேவஸ்தானமே யாத்திரிகர்களிடமிருநது பணத்தைப் பிடுங்கித் தங்கள் உண்டியை நிரப்பிக கொண்டு, அவற்றின்மூலம் அவர்கள் தங்களை வளர்த்துக்கொணடு வருகின்றனர் என்றும், கடைநிலை ஊழியர் முதல் உயர் அலுவலர் வரை யாவரும் ஊழலின் மறு அவதாரம் என்றும் 'நையாண்டி' எனும பெயரில் தன் திறமையை வெளியிட்டிருக்கிறார் அவர் கட்டுரையைப் பார்க்குமபோது அவர் திருப்பதிக்கு வந்தாரா என்பதே சந்தேகமாக உள்ளது. ஆம், யாரோ ஒருவர் கொடுத்த தவறான தகவல்களைக் கொண்டுதான் அவர் அக்கட்டுரையை வரைந்திருக்க வேண்டும். கட்டுரையின் இறுதிப் பகுதியில், அக்கட்டுரையாசிரியர் பொழிந்திருக்கும் கருத்து நகைப்பிற்குரியதாகவே உள்ளது. உண்டி மூலமாகவும், ஆர்ஜித சேவைகளை நடத்துவதாலும் வரும் பணத்தினை பல தர்ம காரியஙகளுக்குச் செலவிடும் தேவஸ்தானத்தினை அவர், தன் மனைவியின் தாலியை விற்று, மாற்றான் வீட்டு திருமணத்திற்கு மொழி எழுதும் ஒரு நபருக்கு ஒப்பிட்டுள்ளார். இது போன்று கட்டுரை முழுவதும் தேவஸ்தானத்தினை குறை கூறி எழுதியுள்ளார், அவருக்குப் பதில கூறத்தொடங்கினால் 'ஆசிரியர் உரை' நீளும். அது அவசியமும் அல்ல.

கருப்பக் கிருகத்தில் மூலவரின்முன் நிற்க ஒவ்வொரு யாத்திரிகரையும் மூன்று விநாடிகள் மட்டுமே அனுமதிக்க வேண்டிய நிலையில் மேலாண்மை உள்ளது. ஆம், அப்போதுதான் 'க்யூ'வில் மணிக்கணக்காகக் காத்துக் கொண்டிருக்கும் மற்றைய சக யாத்திரிகர்களும் அன்றைக்குள் இறைவனின் தரிசனத்தைப் பெற முடியும். ஆகவேதான் கோயிலுக்குள் நடக்க வேண்டிய தினசரி வைதிக சடங்குகளுக்கான நேரங்களை ஒதுக்கி, அதிகமான நேரங்கள் தர்ம தரிசனத்திற்காக ஒதுக்கப்படுகின்றன. சிறப்புதரிசன நேரங்களின்போது, கோயிலுக்குள் ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கைக்கொண்ட யாத்திரிகர்களைத்தான் அனுமதிக்க முடியும். இல்லையெனின் முன்பு நேர்ந்ததைப் போன்று, உள்ளே நெருக்கடி ஏற்பட்டு, கூட்டத்தில் நசுங்கி மாள்வதற்கான வாய்ப்பு ஏற்படலாம். நிற்க. அடுத்து நூற்றுக் கணக்கில் பணம் வசூலித்து செய்யப்படும ஆர்ஜித சேவைகளைப்பற்றிய புகார். ஓர் ஏழை தன் அன்புக் குழந்தையை, தான் விரும்பினாலும் ஒரு குறிப்பிட்ட எல்லைக்குள் நின்றுதான், அலங்கரித்து அழகு பார்கக முடியும். ஆனால் செலவந்தனோ தன் விருப்பம்போல தன் குழந்தையை சீராட்ட முடியும். ஆம், பணம் இருப்பவர்கள்தாம் ரூ. 5000, ரூ. 2000 என செலுத்தி, விசேஷ பூசைகளை நடத்தி இறைவன்மேல் தாங்கள் கொண்ட ஈடுபாட்டினை, பக்தியினை மேலும இறுக்கிக் கொள்கின்றனர். அவர்கள்தாம், தங்கள் வசதிகளுக்காக அதிக பணம செலுத்தி வசதியான காட்டேஜுகளில் தங்குகின்றனா. அவவாறு அவர்கள் வழங்கும் பொருளும், 'சிறு துளி பெரு வெள்ளமாக' யாத்திரிகர்களால் உண்டியில செலுத்தப்படும் காணிக்கைத் தொகையும் தான், நற்பணிகளுக்குப் பரவலாகப் பயன்படுத்தபபடுகிறது என்பதைச் சற்றும் மறத்தல் கூடாது. ஆண்டொன்றுககு சுமார் ரூ 40 இலட்சங்கள் நாட்டில் கோயில்கள் கட்டவும், பாழடைந்த கோயில்களைப் புதுப்பிககவும் செலவழிக்கப்படுகினறன. மேலும் ஆண்டுதோறும் ஒரு கோடி ரூபாய்க்குமேல் கல்விக்காகவும், பல இலட்ச ரூபாய்கள் இந்து சமய மேம்பாட்டிற்காகவும் செலவழிக்கப்படுகின்றன. இவை ஊரறிந்த ரகசியம்.

இன்று வரை மேலாண்மையும், பல மணி நேரங்களாக 'கயூ'வில் நிற்கும யாத்திரிகர்களும் கண்டு வரும் பிரச்சனை விரைவான தரிசனம் பற்றியதுதான். ஒவ்வொரு யாத்திரிகருக்கும் தஙக வாயிலிலிருந்து மூலவர் அருகு வரை வருதற்கான ஆகும் நேரம் சுமாா 5 நிமிடங்கள். இந்த ஐந்து நிமிடங்கள் வரை யாத்திரிகர் மூலவரை நன்றாகக் கண்டு வரலாம். ஆனால் மூலவர்முன் நிற்க ஒவ்வொரு யாத்திரிகர்க்கும் வழங்கும் வாய்ப்பு மூன்று விநாடிகள்தான். அப்படியும், 'க்யூ'வில் நிற்கும் எல்லா யாத்திரிகர்களுக்கும் விரைவான தரிசன ஏற்பாடு கிடைக்கச செய்ய முடியவில்லை. இதனைத் தவிர்க்க ஒரே வழி கோயில் கருப்பக் கிருகத்திலிருந்து வெளிச் செல்ல இரு வழிகளை அமைப்பதுதான. இதற்கான, ஏற்பாடுகள், அவ்வாறு அமைப்பது கோயில் ஆகம விதிகளுக்கு உடன்பட்டு வருமா என்பதைப் பொறுத்து, மேற்கொள்ளப் படவிருக்கின்றன. ஆகவே தன்னாலியன்றவரை தேவஸ்தானம் யாத்திரிகர்களுக்கு உதவவே பல வகைகளில் முயன்று வருகின்றது. திருமலைககு வரும் கூட்டத்தைப் பயன்படுத்திக் கொண்டு, சில ஏமாற்றுப் பேர்வழிகள், கோயிலைச் சாராத வேற்று நபர்கள் யாத்திரிகர்களுக்கு விரைவான தரிசன ஏற்பாட்டினை செய்து தருவதாகக்கூறி அவர்களை ஏமாற்றுகின்றனர்.

தேவஸ்தான ஊழியர்கள் சிலரிடம் குறைபாடுகள் இருக்கலாம். ஏன் பணத்துக்காக ஆசைப்பட்டு தவறான வழி முறைகளை ஊக்குவிக்கக் காரணமாக அவர்களில் சிலர் திகழலாம். அத்தகையோரை உற்சாகப்படுத்தாமல், அவர்களைப் பற்றிய தகவல்களை அருகு உள்ள தேவஸ்தான அலுவலர்களிடம் தெரிவித்தால், அச்செய்கை திருமலையில் அவ்வப்போது நடைபெறும் முறைகேடுகளைத் தீர்க்கும் வகையில் பல முயற்சிகளை மேற்கொள்ள மேலாண்மைக்கு உதவுவதாக அமையும்.

ஆகவே, தவறுகள் நிகழ்கின்றனவா என்ற ஆராய்ச்சி மனப்பான்மையுடன் கோயிலை நெருங்காமல், தவறுகளுக்கும் தப்புகளுக்கும் நாம் இடங்கொடுக்காமல் இருக்கின்றோமா என்பதை மனதிற் இருத்திக் கொண்டால், எல்லா பிரச்சனைகளுக்கும் சுமுகமான தீர்வுகள் கிடைக்கும்

# பொறுப்பாண்மைக் குழு முடிவுகள்

(11-12-78 அன்று, திருமலையில கூடிய குழு கூட்டத்தின்போது தீர்மானிக்கப்பட்ட சில முக்கிய முடிவுகள் பின்வருமாறு)

திருப்பதி ஸ்ரீ கோதண்டராம சுவாமி கோயிலில் சதஸ அரங்கிற்குப் போகும் வழியருகே உள்ள கற்சுவர்களில் செதுக்கப்பட்டுள்ள வேலைப்பாடுகளைப் புதுப்பிக்கும் பணிக்காக ரூ. 2000/- வழங்குவதென்று குழு தீர்மானித்துள்ளது.

ஒரிஸ்ஸா மாநிலத்தில் கோராபுட் மாவட்டத்தில் ஸ்ரீ பாலாஜி வேங்கடரமண கோயிலுக்கென இலவசமாக ஸ்ரீ வேங்கடேஸ்வரர், ஸ்ரீ பத்மாவதி விக்ரகங்களை வழங்க குழு இசைந்துள்ளது.

லக்னோவில ஸ்ரீ ஸனாதன தர்ம சபாவிற்கென இலவசமாக 3 அடி உயரமுள்ள ஸ்ரீ வேங்கடேஸ்வரர் விக்ரகம் ஒன்றினை வழங்க குழு முடிவு செய்துள்ளது.

காஞ்சி ஸ்ரீ காமாட்சி அம்மன் கோயிலின் விமான பணிக்காக, அக்கோயிலுக்கு 3 கிலோ தங்கத்தினை இலவசமாக வழங்க குழு முடிவு செய்துள்ளது.

மாநிலத் தலைநகரங்களிலும், ஆந்திர மாநிலத்தின் மாவட்டத் தலைநகரங்களிலும், குறிப்பிட்ட நகரங்களிலும் தேவஸ்தானத்தாரின் கலையரங்குகளைக் கட்டுவதென்று குழு தீர்மானித்துள்ளது.

திருமலையில் சட்ட ஒழுங்கு முறைகளை பாதுகாக்கவும், பாதுகாப்பு ஏற்பாடுகளை மேற்கொள்ளவும், ஆயுதம் தாங்கிய படைப்பிரிவு ஒன்றினை ஏற்படுத்த குழு முடிவு செய்துள்ளது

திருமலையில் யாத்திரிகர்களுக்கு பிரஸாதங்களை விநியோகிக்கும் பணிகளுக்காக 17 நபர்களை நியமனம் செய்ய குழு தீர்மானித்துள்ளது.

21-12-78 முதல் 23-12-78 வரை 1978-ம ஆண்டிற்கான ஆந்திர மாநிலத்தின் சிறந்த விளையாட்டு வீரர்க்கான போட்டிகள் பல சித்தூரில் நடைபெற்றன. மேற்படி போட்டிகளை நடத்திய குழுவிற்கு, அக்குழு கேட்டுக் கொண்டதன் பேரில் தேவஸ்தானத்தின் பங்காக ரூ 5000/- வழங்க குழு தீர்மானித்துள்ளது.

சென்னையிலுள்ள ஸ்ரீ 'வாசேடு வீரராகவ ரெட்டி சத்திரத்தினை இலவசமாக ஏற்க தி. தி. தேவஸ்தானம் முடிவு செய்துள்ளது. மேலும் அவ்விடத்தில், ஸ்ரீ வேங்கடேஸ்வரர் கோயில், வழிபாடு அரங்கு, திருமண மண்டபம் ஆகியவற்றைக் கட்டவும் தீர்மானித்துள்ளது.

திருமலையில் கல்யாண கட்டாக்களில பணி புரியும் நபர்களின் மாத வருவாயினை உயர்த்துவதற்கு குழு அனுமதி அளித்துள்ளது.

ஹைதராபாத்தில் நடைபெற்றுக் கொண்டிருக்கும் அனைத்திந்திய தொழிற் கண்காட்சியில் நிறுவப்பட்டிருக்கும் ஆந்திர மாநில அறநிலையத் துறையினரின் அரங்கிற்கு, தேவஸ்தானத்தின் பங்காக ரூ. 10,000 குழு அனுமதி அளித்துள்ளது.

ஆந்திர மாநிலத்தில் கிருஷ்ணா மற்றும் குண்டூர் மாவட்டங்களில் புயல் நிவாரண பாதுகாப்பு நிலையங்களைக் கட்டுதற்கென குழு ரூ. 30,00,000 ஒதுக்கியுள்ளது. இந்நிலையங்களை கட்டுதற்கான எல்லா ஏற்பாடுகளையும் தி தி. தேவஸ்தானமே மேற்கொள்ளும்.

கோதாவரி மாவட்டத்தில் பல்வேறு இடங்களில் உள்ள ஹரிஜன வாடாக்களில் ராம மந்திரங்களைக் கட்டுதற்கு குழு ரூ. 90,000 ஒதுக்கியுள்ளது.

திரு.நேதுநூரிகிருஷ்ணமூர்த்தி அவர்களையும் (வாய்ப்பாட்டு) திரு.லால்குடி ஜி ஜெயராமன் அவர்களையும் (வயலின்) தி. தி. தேவஸ்தானத்தின் ஆஸ்தான வித்வான்களாக நியமிப்பதென்று குழு தீர்மானித்துள்ளது

தி. தி. தேவஸ்தான தகவலறிவிப்பு நிலையங்களில் பணிபுரியும் எல்லா நிலைப்பிரிவு ஊழியர்களுக்கும், அவர்கள் வகிக்கும் பொறுப்புள்ள பதவிகளை கருத்திற் கொண்டு, ஒரு குறிப்பிட்ட தொகையினை 'ஊக்கத்' தொகையாக வழங்க' குழு முடிவு செய்துள்ளது.

சென்னை கூச்சுபூடி ஆர்ட் அகாடமியினரால் தயாரிக்கப்பட்ட 'ஸ்ரீபத்மாமதி ஸ்ரீநிவாஸம்' எனும் தெலுங்கு நாட்டிய நாடகத்தினை, மேற்படி குழுவினரின் உதவியால் இந்தி, தமிழ் ஆகிய மொழிகளிலும் தயாரிப்பதற்கு ரூ. 20,000 வழங்க குழு தீர்மானித்துள்ளது.

ஆந்திர மாநிலத்தில் பல்வேறு இடங்களில் உள்ள கோயில்களைப் புதுப்பிக்கவும், வழிபாடு அறை மற்றும் திருமண மண்டபங்களைக் கட்டுதற்கும் குழு ரூ. 5,40,000 ஒதுக்கியுள்ளது.



## அறிவிப்பு

ஸப்தகிரியில் வெளியிடப்படும் கட்டுரைகள் புகைப்படங்கள் ஆகியவற்றிற்கு எந்தவிதமான சன்மானமும் வழங்கப்படமாட்டாது

—தி. தி. தேவஸ்தானம், திருப்பதி

# கார்முகில்



இந்த வார்த்தையை படித்தவுடனே நமக்கெல்லாம் நினைவில் வருவது இருண்டு திரண்ட மேகக் கூட்டம். ஆனால் மிகவும் ஆசையோடும், ஆச்சரியத்தோடும்தான் இதைப் பார்க்கிறோம். இதன் வர்ணம் நம்மை ஈடுபடுத்துகிறது. வரண்ட வயல்களில் உள்ளவர்கள், நீரை எப்பொழுது பார்க்கப்போகிறோமென்று வாடிகிடக்கிறவர்களுக்கு இந்த மேகக் கூட்டத்தைப் பார்த்தவுடனேயே முகமலர்ச்சி வருகிறது. மழையும் பெய்துவிட்டால் அவர்கள் ஆனந்தத்திற்கு எல்லையே கிடையாது. இதுவே பரம பாகவதர்களுக்கும் அருள் மழையாகப் பரிணமிக்கிறது. அவர்கள் நம்மைப்போல் சாதாரண நீருக்கு காத்திருப்பதில்லை. பரமன் அவர்கள் தாபத்துக்கு அவனுடைய கடாக்ஷமாகிய மழையைப் பெய்து இந்த பந்தத்திலிருந்து விடுபடும் வழியை தெரிவிக்கிறான். ஆகையால்தான் 'கார்முகில்' என்று எல்லோரும் பரமனைப் பாடுகிறார்கள்.

திரு. அ. சேஷாத்ரி, பி. இ.,
சென்னை-78.

ஆனால் ஒரு சங்கை எழுந்தது என் மனதில். நிஜமாகவே பரமன் இந்த நிறம் தானா? அல்லது ஒருவர் முதலில் பாடிவிட்டு அதையே தொடர்ந்து எல்லோரும் பின்பற்றி வருகிறார்களா? இல்லையென்றால் யார் யார் இந்த வண்ணத்தை நேரில் பார்த்தவர்கள் என பார்க்கத் துவங்கினேன். அதன் முடிவுதான் இந்தக் கட்டுரை. இங்கு எடுத்துக் கொண்ட ஒரு சிலரே நேரில் அந்த ஸ்ரீமந் நாராயணனைப் பார்த்ததாகவும், பிறர் இல்லையென்றும் முடிவு கட்டக்கூடாது. ராமாயணத்தில் வசிஷ்டர், விசுவாமித்ரர் இன்னும் அநேகர் ராமனைப் பார்த்திருக்கிறார்கள். வால்மீகியின் வாக்குப்படி, கிருஷ்ணாவதாரத்தில், விதுரரும் கோபிகைகளும் பார்த்து அனுபவித்த கிருஷ்ணனைப்போல் யாரும் அனுபவிக்கவில்லை. இவையெல்லாம் கலியுகத்திற்கு முன் நடந்தவைகள். இககலியில் யார்யார் இந்தக்கார்முகில் வண்ணனை பார்த்திருக்கிறார்கள் என்பதைச் சற்றுப் பார்ப்போம்.

முதலாவதாக நம்மாழ்வாரை எடுத்துக் கொள்வோம். அவர் நேரில் பரமார்த்த ஸ்வரூபத்தைப் பார்த்துப் பாடிக் கொண்டே வர, மதுரகவியாழ்வார் நமக்கு திருவாய் மொழியினை தந்திருக்கிறார். அப்படி செய்து தந்துள்ள வேதத்துக்கும் சமமான அதில் என்ன சொல்கிறார்:

1. ஈசன் கருமாணிக்கம் என் செங்கோலக் கண்ணன்
2. கற்பகம் என்னமுதம் கார்முகில் போலும் வேங்கடம் நல்வெற்பன்
3. கார்முகில் போல் வண்ணன், என் கண்ணனை நான் கண்டேனே
4. அழகர் திருமேனியை அனுபவிக்கும் பாட்டில்: "முந்நீர் ஞாலம் படைத்த எம்முகில் வண்ணனே"
5. பரமனை எப்படியெல்லாம் கூப்பிட வேண்டும் என்று சொல்லும்போது, "பங்கயக்கண்ணன் என்கோ? பவளச் செவ்வாயன் என்கோ? என்று சொல்லி வந்தவர் பாட்டின் கடைசி அடியில் "சாதி மாணிக்கத்தையே" என்று கூறுகிறார்;
6. ...கைம்மாவுக்கு அருள் செய்த கார்முகில் போல் வண்ணன் கண்ணன், எம்மானைப்பாடி..."

என்றெல்லாம் பாடினார்;

அடுத்த படியாக ஸ்ரீ ஆண்டாள் என்ற நீளாதேவியை எடுத்துக்கொள்வோம்; இவள் பெரியாழ்வாரால் துளசி வனத்தில் கண்டெடுக்கப்பட்டு ஸ்ரீமந் நாராயணன் மார்பிலுறையும் மகாலட்சுமியே என்பதை யாவரும் அறிவர். இருந்தாலும் பாரில் தோன்றியவுடனே நம்போல்தான் பரமனுக்கு ஏங்குகிறாள்; இங்கு 'நம் போல்' என்றது, பெரியாழ்வார் மற்றும அடியார்களையே குறிக்கும். நமக்கு பரமனைச் சிந்திக்கவும் இந்த உலகில் காலம் கிடைப்பதில்லை. சம்சாரக் கடலில் தினம் நம்மைக் காப்பாற்றிக் கொள்வதிலேயே தான் காலம் கடந்து விடுகிறதே! திருப்பாவை என்னும் வேத சாரமாகிய பாடல்களில் என்ன சொல்கிறாள்? கார்மேனிச் செங்கண், ஆழி மழைக்கண்ணா, மெய்கறுத்து, முகில் வண்ணன் பேர்பாட, பூவைப் பூவண்ணா, மணிவண்ணா-என்றெல்லாம் கிருஷ்ண பரமாத்வைப் பாடுகிறாள். எல்லாம் கருமேகத்தின் திருமேனியைப் பற்றியே பாடுவதைப் பார்க்கிறோம்.

அடுத்தபடியாக கேரள நாட்டில் பிறந்து வாதநோயினால் கஷடப்பட்டு, ஸ்ரீ குருவாயூரப்பனை பாடிப்பாடி, இவையெல்லால் உணமையா என்று கேட்டுக் கேட்டு, அப்பனும் 'ஆம்' என்று தலையசைத்து ஆமோதிக்க, பிறகு பாடிய நாராயண நம்பூதிரி அவர்களின் நாராயணீயம். 1023 பாடல்களைப் பாடிவிட்டு தனக்கு இன்னும் குருவாயூரப்பன் தரிசனம் கிடைக்கவில்லையேஎன்றுஏங்கிதலையை கீழேவைத்து வணங்கி, கால்களை மேலே தூக்கியவுடன் அப்பன் அவருக்கு நேரில் தரிசனம் தருகிறார். அதில் "அக்ரே பச்யாமி" என்று தொடங்கி

(34-ம் பக்கம் பார்க்க)




# எங்களுடைய "ஸப்தகிரி" விற்பனைப் பிரதிநிதிகள்

திரு. கே. ராகவாச்சாரி,
நியூஸ் ஏஜெண்ட்,
ரமணி ஸ்டோர்ஸ், கும்பகோணம்.

திரு. வி. வி. ரங்கசுவாமி,
ஸ்ரீ வேங்கடேசாயா ரங்கநாதம் சிட்பண்ட்ஸ்,
6-14-140, கோட்டூர் (சாலை)
பாளையங்கோட்டை - R.M.S.
திருநெல்வேலி-2.

திரு. பி. கே. சுந்தரராஜன்,
21, முராரிவரதய்யர் தெருவு,
சேலம் டவுன்.

திரு. எஸ். ராமகிருஷ்ணய்யா,
ஸ்ரீ மாருதி காபி வர்க்ஸ்,
ஸ்டேஷன் ரோடு,
ஹோஸ்பெட் (அஞ்சல்) R. S.
கர்நாடக மாநிலம்.

திரு. சி. எஸ். குண்டுராவ்,
845, பி. பி. கார்டன்,
கே.ஆர். மொஹல்லா (அஞ்சல்)
மைசூர்-4.

திரு. எஸ். ஸ்ரீகாந்த ஐயர்,
7/114, செல்லாண்டி அம்மன்
19-வது பிளாக் [கோயில் வீதி.
மேட்டூர் அணை ஆர். எஸ்.

திரு. ஆர். சம்பத் குமார்,
c/o N. கோதண்டராமன், கனரா
பேங்க், 25, நந்தி கோயில் தெரு,
தெப்பக்குளம், திருச்சி-2.

திரு. வாசு வெங்கடேஸ்வரன்,
ஸ்ரீ கண்ணன் ஸ்டோர்ஸ்,
மெயின்பஜார், எம். ரெட்டிபட்டி,
(via) அருப்புக்கோட்டை.

திரு. கே. பி. ஆர். சுவாமி,
106, மஹீம் மேன்சன்,
ஸ்டேஷன் ரோடு,
மஹிம், பம்பாய்-16.

திருமதி.ஏ.வனஜாகிருஷ்ணமூர்த்தி,
46, பழனியாண்டவர்கோயில்தெரு,
களஞ்சியம் ஏஜென்ஸீஸ்,
கொஸபாளையம், ஆரணி-1.

பாஸ்கர் நியூஸ் ஏஜென்சி,
டெய்லி மார்கட், ஜெய்பூர் (P.O.)
கோராபுட் மாவட்டம்.

தினமணி ஸ்டோர்ஸ்,
8/1, பழைய போஸ்ட் ஆபிஸ் வீதி
கோயம்புத்தூர்-18

டாக்டர். பி. கே. கேசவன்.
செவன் ஹில்ஸ்,
2, எம்.எம்.எம். ரெட்டி வீதி
ஜோலார்பபேட்டை.

திரு. ஏ. அருணாசலம்,
22/13. வாளிபாளையம்.
1-வது வீதி, திருப்பூர்.

திரு.எஸ்.என்.கிருஷ்ணய்யாசாமா
10-354 சின்னக்கடை பஜார்,
பரமக்குடி (அஞ்சல்)
இராமநாதபுரம் மாவட்டம்.

திரு. கே. எஸ். கோதண்ட
ராமய்யா, M.A., B.O.L,.,B.T.,
ஓசூர். தர்மபுரி மாவட்டம்.

திரு. பி. விஜயேந்திரா,
நியூஸ் ஏஜண்ட், நகரி (அஞ்சல்)
சித்தூர் மாவட்டம் (ஆ.பி.)

திரு. ஜி. ஸ்ரீநிவாச ஐயங்கார்,
965, வெங்கோப ராவ் லேன்,
ஸ்ரீ வேங்கடேஸ்வர பெருமாள்
தஞ்சாவூர். [வீதி,

திரு. ஏ. ரங்காச்சார்யா,
12-5-5. எஸ்.வி.என். வீதி,
பாபைய்யா பேட்டை, சேமன்,
வரங்கல் (அஞ்சல்) ஆ.பி.

திரு. வி. ஆறுமுகம்,
பழைய இரும்பு வியாபாரம்,
72. காந்தி மார்க்கட்,
பொள்ளாச்சி-642001.

திரு. ஏ. கே. சுப்ரமண்யம்,
நியூஸ் ஏஜெண்ட்,
பாகாலா (அஞ்சல்)

திரு. டி. எஸ். கிருஷ்ணமூர்த்தி,
சிரௌதிகள்
74, ஏ, கிழக்கு முதல் தெருவு,
மன்னார்குடி-614001.

திரு. ஏ. முனுசாமி கௌடா,
ஓல்டு போஸ்ட் ஆபீஸ் ரோடு,
முலபாகல், கோலார் மாவட்டம்.

திரு. டி. சீனுவாஸாசார்யா,
4, சௌந்தரம்மாள் வீதி,
லட்சுமிபுரம்,
குரோம் பேட்டை, சென்னை-44.

திரு. எஸ். நாகராஜகுப்தா,
நியூஸ் ஏஜண்ட் & ஜெனரல்
கிழக்கு பஸ் நிலையம், [மர்ச்சண்ட்,
சித்ரதுர்க்கா.

திரு. வி. திருவேங்கடம் நாயுடு,
73, காளிமுத்து பிள்ளை லேன்,
திண்டுக்கல்.

திரு. ஏ. என். கிருஷ்ணமூர்த்தி,
157, கார்டன் ஏரியா,
ஷிமோகா.

திரு. பி. ராமமோஹன மூர்த்தி,
28-88 ராமேஸ்வரம் அக்ரஹாரம்,
புரதொட்டூர்,
கடப்பை ஜில்லா.

திரு. வி. ஜே. ஜனார்தனன்,
11, புஜங்கராவ் வீதி,
சாலவன பேட், வேலூர்.

திரு. ஆர். வெங்கடேசன்,
68, தெற்கு மாடவீதி,
திருவொற்றியூர், சென்னை-19.

கேப்டன். டி. இ. என். சாரி, பி.ஏ.
16, ஜி. எஸ். டி. ரோடு,
செங்கற்பட்டு-603001.

திரு. கே. ஆர். பாஸ்கர் செட்டி,
22/110, மெயின் தெரு, குண்டக்கல்
அனந்தப்பூர் மாவட்டம்
ஆ. பி. (P.O.)

திரு. வி. லக்ஷ்மி நாராயண செட்டி
மளிகை, பஜார் தெரு, [யார்
இடப்பாடி, சேலம் மாவட்டம்.

திரு. எம். வீரபாகு,
19, தெற்கு ரத வீதி,
ஆழ்வார் திருநகரி, தமிழ் நாடு.

திரு. எஸ். ஜகன்னாதன்,
17-3-1/5 சுந்தரய்யர் வீதி,
சித்தூர். (ஆ. பி.)

திரு. பி. ராஜமாணிக்கம்,
1 மஹாலி அம்மன் கோயில் தெரு,
ஆனைமலை-642104.

திரு. எம். வெங்கடராம அய்யர்,
நெ. 8, தாரகேசவரர் சுவாமி வீதி,
தோட்டபாளையம், வேலூர்.

திரு. ஏ. கணபதி பிள்ளை,
ஸ்டாம்ப் வெண்டார்,
அறகண்ட நல்லூர்-605752.

திருமதி. எஸ். சீதாலக்ஷ்மி,
1, ஐவுளிக்கார தெருவு,
திருவாரூர்-610001.

திரு. எம். வீரபாகு
19, தெற்கு ரத வீதி,
ஆழ்வார் திருநகரி-628612.

தொடர் கட்டுரை :

# தில்லையில் நந்தனாரும் குலசேகரரும்

பகுதி — 2

## குலசேகர மன்னன்

### திருச்சித்திரகூடமும் திருச்சிற்றம்பலமும்

குலசேகர மன்னன் உகந்த திருப்பதிகளில் திருவரங்கம், திருவேங்கடம் திருச்சித்திரகூடம் முக்கியமானவை. திருவரங்கத்தைப் பெரிய கோயிலென்று வைணவர்கள் குறிப்பிடுவது போல் சிதம்பரத்தைக் கோயில் என்றே சைவர்கள் சிறப்பித்துப் பேசுவது இயல்பு. சிதம்பரத்தைத் தில்லையென்றும், திருச்சிற்றம்பலம் என்றும் கூறுவார்கள். கற்பனை கடந்த ஜோதியே அற்புத அழகுடன் நடராஜாவாக நடனம் புரிகின்றார். இதே போன்று கற்பனை கடந்த அறிதுயில் புரிந்து, அற்புத அழகுடன் அருள் புரிகின்றார். இங்குக் கோயில் கொண்டுள்ள திருச்சித்திரகூடப் பெருமாள்;

டாக்டர். G. T. கோபாலகிருஷ்ண நாயுடு,

### தில்லை நகர எழில்

குலசேகராழ்வார் தில்லை நகரின் வளத்தைக் குறிப்பிடுகிறார்:

'' தெளிர்வாய் மலர்நகை சேர்
செழுந்தண் சோலைத் தில்லைநகர் ''

என விவரிக்கிறார். சிவந்த தளிர்களின் நடுவே மலர்களையும், மலர்ச்சி ததும்புகின்ற அழகையும் அள்ளி அள்ளி வீசும் செழுமையும் குளிர்ச்சியும் பொருந்திய சோலைகளையும் உடைத்தாயுள்ள தில்லைநகர் என்கிறார். இங்கு அழகுக்கு அழகு செய்கின்றனவாம் சோலைகள்; குலசேகராழ்வாரை கவிச்சக்கரவர்த்தி என்றே நாம் கருத இடமுண்டு. குலசேராழ்வாருக்குச் சக்கரவர்த்தி நிலைமையுண்டு; கவியின் திறம் உண்டு; அழகாய் மனத்திற் பாயும் வண்ணம் சொற்களைப் பிரயோகம் செய்யும் திறமையுண்டு; எனவே கம்பன் பெருமைக்குச் சமீபமாக குலசேகராழ்வாரை கவிச்சக்கரவர்த்தி என்றே நாம் கருதலாம்.

தில்லைநகரின் உயர்ந்த மதிலையும் குறிப்பிடுகிறார்.

'' தெவ்வா அஞ்சு நெடும்புரிசை
உயர்ந்த பாங்காத் தில்லைநகர் ''

என்று பாடுகிறார். நகரின் மதிலைக் கண்ட மாத்திரத்தில் இதனை எப்படிக் கடந்து செல்லமுடியும் என அஞ்சி, விரோதிகள் ஒதுங்கிப் போய் விடுவார்கள் என்று விவரிக்கிறார். தில்லை நகரை திருச்சித்திரகூடம் என வர்ணிக்கிறார் நம் புலவராகிய ஆழ்வார்.

### தேவாதி தேவன் கோவிந்தராஜன்

தில்லை நகரத் திருச்சித்திர கூடத்தில் எழுந்தருளியிருக்கும் கோவிந்தராஜப் பெருமாளை ஆழ்வார் அநுபவிக்கிறார். இப்பெருமாள் நடராஜர் கோயிலின் புறத்தே கோயில் கொண்டிருக்கிறார். கோவிந்தராஜனைத் தில்லை வாழ் அந்தணர்களான மூவாயிரவரும் வழிபட்டதாகக் குலசேகராழ்வார் கூறுகிறார்.

'' அந்தணர் ஒரு மூவாயிரவர் ஏத்த
அணிமணிஆ சனத்(து) இருந்த
அம்மான் தானே ''

தில்லை மூவாயிரவர் துதிக்க, அழகிய ரத்தின சிங்காதனத்திலே அமர்ந்த சர்வேச்வரனாகிய கோவிந்தராஜர் எனப்போற்றுகின்றார். திருமங்கை மன்னனும் திருச்சித்திரகூடத்துப் பெருமாளைத் தில்லை வாழ் அந்தணர்கள் வணங்கியதாகப் பாடியுள்ளார். தேவாதி தேவனாகிய திருச்சித்திர கூடத்து அமர்ந்தபெருமாளைச்சேர்ந்து வழிபடுங்கள் எனத் திருமங்கையாழ்வார் மங்களாசாசனம் செய்கிறார் இப்பாட்டில்:



ஸ்ரீ குலசேகராழ்வார்-திருப்பதி,
S. V. K. S. ஸ்ரீநிவாசன்-திருப்பதி.

'' மூவா யிரநான் மறையாளர் நாளும்
முறையால் வணங்க அணங்காய சோதித்
தேவாதி தேவன் திகழ்கின்ற தில்லைத்
திருச்சித்ரகூடம் சென்றுசேர்
மின்களே ''

நான்கு வேதங்களையும் அப்பியசிக்கும் தில்லை மூவாயிர அந்தணர்கள் வணங்கும் அழகும் சோதியும் கொண்ட

தேவாதி தேவனை வழிபடுங்கள் எனத் திருமங்கை ஆழ்வார் நமக்கு எடுத்துரைக்கிறார்.

## சிற்றம்பலமும் தெற்றியம்பலமும்

தில்லைச் சிற்றம்பலமான பெருங் கோயிலில் திருமால் கோயிலும் இடம் பெற்றதற்குப் பல்லவ மன்னவர்களின் சைவ வைஷ்ணவ சமரச உணர்ச்சி காரணமாக இருந்தது. ராமன் வனவாச காலத்தில் தங்கியிருந்த சித்திர கூட மலையின் பெயரையிட்டு இக் கோயிலைப் பல்லவ மன்னரில் ஒருவன் ஒரு சித்திரசாலைபோல் அழகாக அமைத்தான். நந்திவர்ம பல்லவன் என அழைக்கப்பட்ட இம்மன்னன் இப்பெருமாளிடத்து விசேஷ பக்தி யுள்ளவனாக இருந்தான்.

சித்திரகூடம் என்பது சித்திரசாலை. அதாவது தெற்றியம்பலம்—மேட்டிட மாக அமைந்த சித்திரசாலை. சிற்றம் பலமான சிவாலய வழிபாடும் தெற் றிம்பலமான சித்திரகூட வழிபாடும் வெகு சமீபத்தில் முறைப்படி நடை பெறச் செய்திருப்பது அக்காலத்துச் சமரச சமயஉணர்ச்சிக்குத் தக்கதொரு சான்றாகும். ஆனந்த நடனம் புரியும் பெருமானையும், ஆனந்த யோக நித் திரையில் ஆழ்ந்த பெருமானையும் சம நோக்குடன் பல்வவ மன்னர்கள் வழி பட்டு வந்தனர்.

குலசேகரர் காலத்திலே சிற்றம்பல வழிபாடும் சித்திரகூட வழிபாடும் சமமாக நடைபெற்றன என்பது திண்ணம். திருஞான சம்பந்தர் தமது சிற்றம்பலப் பதிகத்திலே சர்ப்பசயன மூர்த்தியாகிய திருமாலும் பிரம்ம தேவனும் அடிமுடி தேடிக் காணாத நிலையில் தமது இஷ்டமூர்த்தியான சிவபெருமான் கனலாய் ஓங்கிய கதை யைக் குறிப்பிடுகிறார். குலசேகரரும் தமது சித்திரகூடப் பெருமானை,

**"எங்கள் தனி முதல்வன்,"**

எனப் போற்றுவதைக் காண்கிறோம்.

## தொல்லி ராமன் கதை

ஸ்ரீராமாவதார வைபவத்தில் குல சேகராழ்வார் தில்லைத் திருச்சித்திர கூடப் பெருமானை ராமனாகவே பாடி யிருப்பதைக் காண்கிறோம். சக்கர வர்த்தித் திருமகன் விக்கிரக ரூப மாகத் தில்லைத் திருச்சித்திர கூடத் தில் காட்சியளிக்கிறார் என்பது குல சேகராழ்வார் கருத்து. இத்திருப் பதியிலே ராமன் திருக்கதையை அவ தாரத்திலிருந்து தொடங்கி முற்றும் தொகுத்துப் பாடி அநுபவிக்கிறார் நம் ஆழ்வார். தில்லைத் திருச்சித்திரகூட மானது,

"நெடுமதில் புடை சூழ அயோத்தி"

யாக விளங்குகிறது. மற்றும்,

"உலகனைத்தும் விளக்கும் சோதி"

யாகவும் ஓங்குகிறது. குலசேகரர் இப் பெருமானைச் சூரியன் சந்திரன் அக்கினி என்ற முச்சுடரின் ஒளியாகவும் பரஞ் சோதியாகவும் காண்கிறார்.

குலசேகரர் அருளிய ராம கதைச் சுருக்கம் பெருமாள் திருமொழியில் முக்கியத்துவம் அடைந்தது. தமது முதல் பாசுரத்திலிருந்து ராமனது வீர சரித்திரத்தை உரைக்கிறார்!

"தில்லை நகர்த் திருச்சித்திர கூடந் தன்னுள்
எங்கள் தனி முதல்வனையெம் பெருமான்
தன்னை என்று கொலோ கண் குளிரக்
காணு நாளே."

எனத் தொடங்குகிறார்.

ராமாயணத்தில் பிரஸ்தாபிக்கப் படும் சித்திரகூடமலை வட நாட்டில் உள்ளது. அதிலிருந்து வேறுபாடு தோன்ற,

"தில்லை நகர்த் திருச்சித்திரகூடம்"

என்று ஆழ்வார் குறிப்பிடுகிறார். கரு முகில் இராமன் இங்கு வீற்றிருப் பதைக் கண் குளிரக் காண்பேன் என ஆரவாரிக்கிறார்.

ஆதியில் காடாக இருந்த தில்லை, குலசேகரர் காலத்தில் செழிப்பான குளிர்ந்த பசுஞ்சோலைகளும் பன்னிற மலர்களும் வாய்ந்து, அழகுடன் பெரு மதில்கள் பொருந்தித் திகழ்ந்தது: திருச்சித்திரகூடத்துப் பெருமானை அணிமணியாசனத்தில் "திருமகளோடு இனிது அமர்ந்த செல்வன்",

திருச்சித்திரகூடம் தன்னுள் திருமக ளோடு அமர்ந்திருப்பவன் என்று நம் ஆழ்வார் குறிப்பிடுகின்றார்.

தில்லை நகர்த் திருப்பதியில் நித்திய வாசம் பண்ணுகிறவன் "திருச்சித்திர கூடம் தன்னுள் உறைவான்", எனக் குலசேகரர் கூறுகிறார்; மற்றும் இக் கருத்தைத் தெளிவாக விளக்கும் வகையில்;

"தில்லை நகாத் திருச்சித்திரகூடம்
தன்னுள் என்றும் நின்றான்"

என்றும் கூறுகிறார்.

அநுமனுடனே ராமன் திருச்சித்திர கூடத்தில் வீற்றிருப்பதாகக் கூறும் பாசுரத்தை இங்குப் பகர்வோம்;

"தில்லை நகர்த் திருச்சித்திர
கூடம் தன்னுள்
திறல் விளங்குமாருதியோ(டு)
அமர்ந்தான் தன்னை"

தில்லைத் திருச்சித்திரகூடத்துப் பெருமானின் அடியார்கள் சஞ்சரிக்கப் பெறுவதால் இந்நகர் தவமுடையது.

"தில்லை நகர்த் திருச்சித்திரகூடம் தன்னுள்
தலைவணங்கிக் கைகூப்பி ஏத்த வல்லார்
திரிதலால் தவமுடைத்துத் தரணி தானே",

என்பது இவர் திருவாக்கு.

தில்லைச் சித்திரகூடத்துப் பெரு மாளின் அடியார்கள் நாடெங்கும் திரிந்து பலரையும் நல்வழிப்படுத்தி வந்தனர். திருச்சித்திரகூடத்துப் பெருமானை வணங்கும் அடியார் களுடைய திருவடிகளைத் தாம் வணங் கியதாக,

"இறைஞ்சுவார் இணையடியே
இறைஞ்சினேனே":

என்று நம்மாழ்வார் கூறுவதிலிருந்து, இவ்வடியார்களையும் இவர் தமது தலைநகரில் சந்தித்திருக்கக்கூடும்.

(33-ம் பக்கம் பார்க்க)

# இந்தியப் பண்பாடும் சமஸ்கிருதமும்

மொழி என்பது நம் மனதில் எழும் எண்ணங்களை-உணர்ச்சிகளை பிறருக்கு உணர்த்த உதவும் ஒரு அவசியமான சாதனமாகும். இதனையே, திரு. ஸாமுவேல் ஜான்ஸன் "Language is the dress of Thought" என்று மிக எளிமையான முறையில் கூறுகிறார். "செப்பு மொழி பதினெட்டுடையாள்" என்று பாரத மாதாவை மகாகவி பாரதியார் வர்ணிப்பதுபோல் நம் நாடு பல மொழிகளைக் கொண்டுள்ள போதிலும் பேச்சு, எழுத்து வழக்குகளில் பல மொழிகளும், சில பேச்சு வழக்கு மட்டிலும் காணப்படுகின்றன மொழியின் அழகு அதன் அதன் தொன்மையிலும், எளிமையிலும் அமைந்துள்ளது.

செறிந்த இலக்கண மரபுகளைக் கொண்டும், அதே சமயத்தில் பேசும் மொழியாகவும் வழங்கப்பட்டு வந்தது சமஸ்கிருதம். இதுவே இந்தியாவிலுள்ள அனைத்து மொழிகளுக்கும் முன்பு தோன்றியது என்று கணக்கிடப்பட்டுள்ளது. இதன் முதல் வடிவம் ப்ராக்ருதம் எனப்பட்டது. பிறகு இதற்கு சமஸ்கிருதம் (நன்றாக செய்யப்பட்டது - திருத்தி அமைக்கப் பட்டது என்ற காரணத்தால்) என்ற பெயர் வைக்கப்பட்டது.

**बोली एक अमोल है** (பாஷை என்பது விலை மதிப்பற்றது) என்று மொழியின் பெருமையை கபீர்தாஸ் அழகுபடக் கூறுகிறார். ஒவ்வொரு மொழிக்கும் அதனதன் தனிச்சிறப்பும், தன்மையும் உண்டு. தமிழின் தனிச்சிறப்பு அதன் 'ள' கர, 'ழ'கரங்களாகும். ஆனால் வட மொழி என்று கூறப்படும் சமஸ்கிருதத்தின் தனிச்சிறப்பு அதன் அனைத்து எழுத்துக்களிலும் - முக்கியமாக அதன் க, ச, ட, த, ப, (ஒவ்வொன்றிலும் நான்கு எழுத்துக்கள்) களில்-அதன் ஏற்ற, இறக்க ஒலிப் பிரயோகங்களில் காணப்படுகிறது.

ஒலிகளின் கூட்டமே மொழியெனினும் பலவித ஒலிகளைப் பெற்றுள்ள இம்மொழி பொதுப்படையாக நோக்கின சிறிது கடினமானதாகவும், பயிற்சிக்கு (நடை முறை வாழ்க்கை உபயோகத்திற்கு) உகந்ததல்லாதது போலவும் காணப்படினும் இதன் சுவையையும், இனிமையையும் இம்மொழியைக் கற்றுணர்ந்த ஒவ்வொருவரும் நன்கு அறிவர்.

ஸ்ரீ க்ருஷ்ணனின் உடல், முகம், சிரிப்பு ஆகியவைகளின் ஒப்பற்ற அழகை ஸ்ரீ லீலாசுகர் "ஸ்ரீ க்ருஷ்ண கர்ணாம்ருத"த்தில் வர்ணிக்கும்போது

**मधुरं मधुरं वपुरस्य विभोः मधुरं मधुरं वदनं मधुरम् ।**
**मधुगन्धि मृदुस्मितमेतत् अहो ! मधुरं मधुरं मधुरं मधुरम् ॥**
(Verse 92)

(மதுரம் மதுரம் வபூரஸ்ய விபோ;
மதுரம் மதுரம் வதனம் மதுரம்
மதுகந்தி ம்ருதுஸ்மித மேதது
அஹோ! மதுரம் மதுரம்
மதுரம் மதுரம்)

என்று "இனிமை" என்ற பொருள் கொண்ட "மதுர" சப்தத்தையே உபயோகிக்கிறார். இதனை மேலாகப் படிக்கும்போதே மனதில் எவ்வளவு குதூகலம் உண்டாகின்றது? இன்னும் ஆழ்ந்து பொருளுணர்ந்து, பொருளின் தேவதையான ஸ்ரீ க்ருஷ்ணனை இதய பீடத்தில் இருத்திப்படித்தால் நெஞ்சம் உருகி மெய் சோருமன்றோ! இவ்வாறு பொருள் புரியாவிடினும், வாயால் ஒரு முறை படிக்கும்போதே உடலில் மட்டுமல்லாது உள்ளத்திலும் மகிழ்வைக் கொடுக்கவல்லது சமஸ்கிருதமே. இம்மொழியின் கடினத்தன்மையினுள்ள அழகையும்,

**"कटरद्ध अटनि टंकृति चटुल कठोर कार्मुक!"**
(கடுரடத அடனி டஙக்ருதி சடுல கடோர காாமுக) என்ற ஸ்ரீ தேசிகரின் "ரகுவீரகதய"த்தைப படிக்கையில் உணரலாம்

இறந்த மொழி (Dead Language) என்று ஏளனமாகக் கூறப்படும் இம்மொழி தன்னிடமுள்ள குறைகளினால் இறக்கவில்லை. கால ஓட்டத்தில இம்மொழி வழக்கில் இல்லாமல் பிற மொழிகள் வந்துவிட்டவாகையால் இப்பொழுது இம்மொழி இறந்து பட்டதுபோல் - நீறு பூத்த நெருப்பு போல்-தோற்றமளிக்கிறது. மேலே பூத்துள்ள நீறை நீக்கி நெருப்பை ஊதி மேலும் பிரகாசிக்கச் செய்வது ஒவ்வொரு இந்தியனின் கடமையாகும்.

இம்மொழியின் அழகும், கருத்தாழம் மிக்க இலக்கியங்களும் இம்மொழியைக் கற்கத் தூண்டும் என்பது மட்டுமின்றி, இந்தியப் பண்பாட்டை அறியவும் மிக உயர்ந்த முறையில் துணைபுரியும் மொழி இதைத் தவிர வேறொன்றும் இல்லை "எவராலும் செய்யப்பட்டது அல்ல" என்று கூறப் படும் "வேத"த்தில் உள்ள மொழி சமஸ்கிருதமே ஆகும். ச்ருதி, ஸ்ம்ருதி, புராணங்கள், உபநிஷத்துக்கள் முதலியவைகளிலும் இம்மொழியே உபயோகிக்கப்பட்டுள்ளது. பாணினியின் ஸுத்ரங்கள், ந்யாய ஸாஸத்ரம், நாட்ய ஸாஸ்த்ரம், ஜோதிடம், ஆயுர்வேத ஸாஸ்த்ரம். கணிதம், விஞ்ஞானம் மற்றும் உலக வாழ்க்கைக்குத் தேவையான இல்லற வாழ்வு பற்றிய விவரங்கள் முதலியவைகளைப்பற்றிய விளக்கங்களையும் இம்மொழியில் விரிவாகக் காணலாம். நவீனமான இந்த யுகத்தில் கண்டு பிடிக்கப்பட்டுள்ள பல விஞ்ஞான தத்துவங்கள்-அந்நாளில் பல முனிவர்களால் சொல்லப்பட்ட, அனுபவிக்கப் பட்ட உண்மைகளே என்பதை நாம் நம் வாழ்க்கையில் காண்கிறோம்.

எல. மைதிலி, B Sc.
சென்னை – 24.

சமஸ்கிருதச் சொல் கலககாத இந்திய மொழிகள் மிகச் சிலவே. சிங்கப்பூர், இந்தோனேஷியா, கம்போடியா, ஜப்பான், மலேயா போன்ற நாடுகளிலும் பல்லாயிரம் ஆண்டுகட்கு முன நமது இநதிய நாக ரீகம் பரவயிருநதது எனறும, அம மொழிகளில் தறபொழுதும் சமஸ் கிருத சொற்கலப்புக்கள் காணப்படு கினறன எனறும ஆராய்ச்சி வல்லு நாகள கூறுகின்றனா. சமஸகிருத மொழியை நன்கு கற்றுணர்நத ஒருவன் அம்மொழியையும வெகு சுலபமாகக கற்றுக் கொள்ளலாம். இதை நாம் இன்றும் கண்கூடாகக் காணலாம். நமது மதிப்பிற்குரிய திரு ராஜாஜி அவர்களும் "இறை வனை இடையறுது நினைப்பதற்கும், அன்றுட அலுவல்களை சிரத்தையுடன் சரிவரச் செய்வதற்கும் சமஸ்கிருத மொழி அறிவு மிகவும அவசியம். நான் அம்மொழியை நன்கு கற்காததை நினைத்து பல முறைகள் மிகவும் வருந்தியிருக்கிறேன்" என்று கூறியுள்ளார்.



ஸ்ரீதேவி பூதேவியுடன் ஸ்ரீ வேங்கடேஸவரர்–திருமலை சமப்ரோக்ஷணம்

நம் இநதியாவின் மிகப் புராதனமான-கால வரம்பற்ற கலாசாரம், பண்பாடு இவைகளின் அடிப்படை சமஸ்கிருத மொழியிலுள்ள வேதங்கள், உபநிஷத்துக்கள், புராணங்கள் முதலியவைகளே யாகையினுல் நம் பண்பாட்டை முறையாக நன்கு அறிய விரும்புபவர்கள் சமஸ்கிருதத்தை முதலில் கற்றே ஆக வேண்டும். மொழி பெயர்ப்புகளை படிப்பதன் மூலம் இந்தியப் பணபாட்டை அறியலாமெனினும், மூலத்தை படிப்பதிலுள்ள சுவை மொழி பெயர்ப்பில் இருக்காது என்பதை எவரும் ஒப்புக் கொள்வர்.

மேலும் இம்மொழியில் கணக்கற்ற இலக்கியங்களும் காவ்யஙகளும் காணப்படுகின்றன. காளிதாஸனின் குமாரஸம்பவம், மேக ஸந்தேஸம், ரகுவம்ஸம் முதலியவைகளையும், வால்மீகியின் ராமாயணம், வியாசரின் பாரதம், மாகனின் ஒப்பற்ற கவிதைகள் முதலியவைகளையும் படிக்கும் போது அந்நாளைய இந்தியப் பண்பாட்டை நாம் நன்ருக உணரலாம்.

"Literature exists to please to lighten the burden of men's lives, to make them forget the sorrows and their sins, their silenced hearths, their disappointed hopes; their grim futures." என்ற பிரால் (Birrel) என்பவரின் கூற்றுப்படி இலக்கியங்களைச் சுவைத்துப் படிக்கும்போது நம்முடைய உலகமே தனித்தன்மை வாய்ந்ததாக-ஸாகரமான ஸாதாரணமான ஸம்ஸாரத்திலிருந்து முற்றிலும் வேறுபட்டதாக-தோன்றுகிறது. இந்த விதி எல்லா மொழிகளுக்கும் பொருநதுமெனினும, இந்தியப் பண்பாட்டை அறியவும, அதன் ஆழ்ந்த நுணுக்கமான உணமைகளை உணரவும் சமஸ்கிருத மொழி அறிவு அவசியம்.

" संस्कृते सुन्दरं काव्यं संस्कृते मधुरो ध्वनिः।
संस्कृते विविधं ज्ञानं, संस्कृते किं न
सुन्दरम् ।। "

(சமஸ்கிருதே ஸுந்தரம் காவ்யம்,
சமஸ்கிருதே மதுரோ த்வனிஃ|
சமஸ்கிருதே விவிதம் ஞானம்,
சமஸ்கிருதே கிம் ந ஸுந்தரம்|| )

(சமஸ்கிருதம் அழகான காவ்யங்களையம், இனிமையான ஒலிகளையும் கொணடது; விதவிதமான ஞானங்களை - அறிவை கொடுக்கவல்லது. இப்படிப்பட்ட சமஸ்கிருதத்தில் எது தான் அழகாக இல்லை?) ★

# சரணாகதி தத்துவம்

திரு. ஆர். பத்மநாபன், B. A., B. T.
வேலூர்-12.

வேதாந்த மதத்தில கர்மம, ஞானம், பக்தி, பிரபத்தி எனகிற சரணாகதி எனகிற நான்கு மோக்ஷோபாயஙகள் இருக்கின்றன. இந்நானகு உபாயங களுள் முதல மூன்றான கர்மம, ஞானம், சக்தி ஆகியவற்றை இக்கலி யுகத்தில் அனுஷ்டிப்பது மிகககடினம். ஆகவே இறுதி உபாயமான சரணாகதி யையே மிகச் சிறந்த உபாயமாகக் கொணடு அதையேபற்றித் தம்முடைய திருவுளளத்தை எமபெருமாளிடம் ஈடுபடுத்த வேணடும என்பது இனறி யமையாதது. இதையே திருமலையில் எழுநதருளியிருக்கும் திருவேங்கட முடையான் தமது திருக்கரங்களால் நமக்கு அறிவுறுத்துகிறார்.

வைணவ சம்பிரதாயத்தில் பக வானுடைய ஐநது வகை வடிவங்களி லும் அர்ச்சாவதாரமே குண பூர்த்தி யுள்ள இடம என்றும், அதில் சரண டைதலே சாலச் சிறநதது என்றும் சொல்லப்படுகிறது. 'ஆழவார்கள் பற் பல விடங்களிலும பிரபத்தி பண்ணிற் றும் அர்ச்சாவதாரத்திலே' என்பது ஸ்ரீவசன பூஷண வாககியம். இதனால் திருமஙகை மன்னனும், 'நாலேன் வந்தடைநதேன், நல்கி யாளென்னைக் கொணடருளே!' என்று பல படியாக, வேங்கடவனையே எல்லாச் சுற்றமுமாக நினைத்து அவனடியே அடைகலப் பொருள் என்று பாடுவாரானார். நம் மாழ்வாரும் 'உலகமுணட பெருவாயா' என்று ஆரம்பிக்கும திருவாய் மொழி யில் தாம் சரணம புகுகின்றார்.

எனவே சரணாகதி அல்லது பிரபத்தி யொன்றே எல்லோராலும் அநுஷ்டிக் கத் தக்கதாம். ஸ்ரீ பகவத் ராமாநுஜர் தமது கீதா பாஷ்யத்தில், சரம சுலோ கத்திற்குப் பொருள் எழுதும்பொழுது, 'பக்தியோகம மோக்ஷ சாதனம்', என்று கூறுவதால், அவருடைய தரி சனத்தைப் பின்பற்றும் நாம் பக்தி யோகம் செய்வது தவறு என்று கூறு வது பொருத்த முடையதன்று; பக்தி யோகம் செய்வதற்கு வேணடிய ஞான சகதியற்றவர்களே பிரபத்தியை மேற கொளள வேண்டியவர்களாவர். பிர பததி செய்பவாகளுக்கு பெருமாள் பக்தி நிலையில நின்று கொணடு பக்தி யால் அடையப்பெறும் மோக்ஷத்தைக் கொடுக்கிறான்.

## பிரபத்தியின் விளக்கம்

பிரபத்தி அல்லது சரணாகதி (1) நானும் என்னுடைமையும் இறைவனு டையது: (2) மோக்ஷத்திற்காக வரை யறுககப்பட்ட பக்தியோகம் செய்ய என்னால் இயலவில்லை; அஃது இல்லாம லேயே பேரின்பமாகிய மோக்ஷத்தைக கொடுக்கும் பொறுப்பு இறைவனு டையது, என்னுடையதன்று. மோக்ஷத் தைக் கொடுப்பதால் வரும் பலாபன் இறைவனுடையது; என்னுடைய தல்ல, என்று இங்ஙனம் எல்லாவற் றையும் சேர்த்து நினைப்பதாகும்.

## பகவத் கீதையில் :

பகவான் கீதையில, 'சர்வ பாபேப் யோ', என்று சொல்லியிருப்பதால் நாம் பிரபத்தி செய்வதற்குமுன் செய் திருந்த பாபஙகளனைத்தையும் பிர பத்தி செய்து, அவற்றை இறைவன் போக்கிவிடுவான் என்பது பொருள். அப்பாப காரியங்களுக்கு எம்பெரு மானால் தணடிக்கப்படுவது உறுதி; நாம் பாபகாரியம் செய்வதுவிட்டால், அதற்குத் தகுநத பிராயச் சித்தம் செயது கொள்ள வேண்டியது அவ சியம். பிரபத்தி செய்யும் நமக்குச் சுலபமான தணடனையை விதித்து, பிறகு நம்மை மோக்ஷத்திற்காக அருள் புரிவான். எனவே பகவான் கீதை யில் 18-ஆம் அத்தியாயத்தில், 'சர்வ தர்மான் பரித்யஜ்ய, மாம் ஏகம் சரணம் வ்ரஜா' என்று கூறியிருப் பதை எப்பொழுதும் மனத்தில் வைத்துக் கொள்ள வேண்டும்.

பிரபத்தி செய்பவன் இவவுலகத்தில் வாழும்பொழுது மனோவாக்கு காயங் களால் செய்யும் ஒவவொரு கருமமும் எம்பெருமானுடைய அனுக்கிரகத் திற்கு நோக்குகிறது எனறும், எம் பெருமானுககு நிவேதனம் செய்த ஆகாரத்தையே தான புசிக்க வேண்டு மென்றும, சதாகாலமும, பக்தி நூல் களைப் படிக்க வேணடும் என்றும், மற்றும் இப்படி நாம் இருக்கிறோம் என்று கொஞசங்கூட கர்வம் கொள் ளாமல் இருக்க வேண்டியது மிகவும் அவசியம். இதேகருத்து கிறிஸ்தவ கத் தோலிக்க நூல்களிலும், மறுப்போர் நூலகளிலும பரக்கக் காணலாம். இத்தகைய கருத்தும், சிந்தனையும் நம் முடைய ஆழ்வாருடைய அருளிச் செயலகளில் பரநது இருப்பதை நாம் நன்கு அறிவோம.

## முடிவுரை :

இதே கருத்து பதினாறு பாட்டுக்கள் கொணட ஸ்ரீ வேங்கடேச பிரபத்தி யில் பரக்கக் காணகிறோம். இக்கருத்து கலியுக வரதனான வேங்கடவன் தனது வலது திருக்கரத்தைத் திருவடி பக்க மாகச் சாய்த்து நம்மைக் கடாக்ஷித்து, 'பக்தர்களே! என் திருவடியினைச் சரணமடையுங்கள்! இக்கலியுகத்தில் இவையன்றி செய்யும் வழி வேறெதும் உங்களுக்குக்கிடையாது'' என்று அறி வுறுத்துவதாக அமைந்துள்ளது.

'கலௌ வேங்கட நாயக', என் பதற்கேறப, சரணாகதி தர்மத்திற்கு எடுததுக் காட்டாக சேவை சாதிக் கிறார் ஸ்ரீ வேங்கடாசலபதி.

'பார்த்தாய தத்ஸதருஸ சாரதிநா
தத்யைவ
யௌ தர்ஸிதௌ ஸவசர ரணௌ
சரணம் வ்ரஜேதி
பூயோபிமஹ்யமிஹ தௌ கரதர்
சிதௌ தே
ஸ்ரீவேங்கடேச சரணௌ சரணம்
ப்ரபத்யே'!

# அன்னமய்யா கீர்த்தனை

பண்ணமைத்தவர் .
*Sri G Balakrishna Prasad, Dip in Music, HYDERABAD*

மத்யமாவதி ராகம்: ஆதிதாளம்

ப :- க்ஷீராப்தி கன்யககு – ஸ்ரீ மஹா லக்ஷ்மிகினி – நீரஜாலயமுனகு – நீராஜனம் ||க்ஷீ||

3
ச :- ஜலஜாக்ஷி மோமுனகு – ஜககவ குசம்புலகு – நெலகொன்ன கப்புரபு – நீராஜனம்
3
அலிவேணி துருமுனகு – ஹஸ்த கமலம்புலகு – நிலுவு மாணிக்யமுல – நீராஜனம் ||க்ஷீ||

4 3
ச :- சரண கிஸலயமுலகு – ஸகியரம்போருலகு – நிரதமகு முததேல – நீராஜனம் |
3 4 3 4
அரிதி ஜகனம்புலகு – அதிவ நிஜநாபிகினி – நிரதி நாநாவர்ண – நீராஜனம் ||க்ஷீ||

3 3
ச :- பகடு ஸ்ரீ வேங்கடேஸு – பட்டபு ராணியை – நெகடு ஸதி களலகுனு – நீராஜனம் |
3 3 3 3 4
ஜகதினலமேல்மங்க – சககதனமுலகெல்ல – நிகுடு நிஜ ஸோபனபு – நீராஜனம் ||க்ஷீ||

ப :- ரிப பாமரீ ரிஸ ஸா , ஸ ஸா ஸா | நீ , ஸரிமரிஸ | ஸா , ஸ ஸா ஸா ||
க்ஷீ ராப் தி கன் ய க கு | ஸ்ரீ மஹா | ல க்ஷ்மி கி நி ||

நீ , ஸ ரீமரி மபா பபா பா | பா நி நீஸ்நி | பநி பாம ரிமரீ ம ||
நீ ர ஜா லய முந கு | நீ ரா ஜ | னம் ||

ரிப பா மரீ ரிஸ ஸா ; ; ; | ரிப பா மரீ ரிஸ | ஸா ; ; ; ||
நீ ரா ஜ னம் | நீ ரா ஜ | னம் ||

ச :- ம மா மா , மா மா , ம மா மா | ரீ மப நிநிபம | ரீ , ஸநீ ஸா ||
ஜல ஜா க்ஷி மோமு ன கு | ஜக்க வ கு | சம்பு ல கு ||

ரி மா மரீ மா மா பபமபா | பா நி நீஸ்நீ | பா ; : , ||
நெல கொன்ன கப்புர பு | நீ ராஜ | னம் ||

ப நீ நீ , நி பநீநிநீநீ | ; பா நி மபா | பஸ் நி நிநீநீ ||
அலிவேணி துருமுனகு | ஹஸ் த கம | லம் புலகு ||

நிநீஸ் ரீ , ம் ரிஸ் நீ நிநீநீ | ஸ்ஸ்ா நி பா நீ | நிஸ் ஸ்ா ; ; . ||
நிலுவு மா ணி க் யமுல | நீ ரா ஜ | னம் ||

நிஸ்ா ரிநி நிஸ் ஸா நி பா , நிமாபா | பா நி நீஸ்நீ | பநி பாம ரிம ரிம ||
நிலு வு மா ணிக் ய மு ல | நீ ரா ஜ | னம் ||க்ஷீ||

ச :- ஸ்ஸ்ா ஸ்ா , ஸ்ா நி ஸ்ஸ்ஸ்ா , ஸ்நி | , நீஸ் ரிம்ரிஸ் | ஸ்ா , ஸ் ஸ்நிநிப ||
ப க டு ஸ்ரீ வேங்க டே ஸு | பட்ட பு | ரா ணி யை ||

நிஸ்ாரி நிநிஸ்ப பநீ பம ரீரீ | ரீம பாஸ் ரிஸ் | ஸ்ஸ்நிநீ ; ; ||
நெகடு . ஸதி களல குனு | நீ ரா ஜ | னம் ||

பநி நீ நீ , பநி நி நீ , நீ , நீ | ; பாநி பம பா | பஸ்நி நீ , நீ ||
ஜ க தி ன லமேல்மங்க | சக்க த ன | முல கெல்ல ||

நிரீம பா பஸ் ஸ் ஸ்நி பபா மா | பா நி நீஸ்நீ | பநி பா ம ரிம ரீம ||
நிகுடு நி ஜ ஸோ பன பு | நீ ரா ஜ | னம் |க்ஷீ|

அத்தியாயம்-10

விபூதி யோகம்: பகுதி - 7

அச்வத்த: ஸர்வ வ்ருக்ஷாணாம்
தேவர்ஷீணாம் ச நாரத:
கந்தர்வாணாம் சித்ரரத:
ஸித்தானாம் கபிலோ முனி: ||26||

''அனைத்து மரங்களிலும் நான் அரசமரம். தேவரிஷிகளுள் நான் நாரதர். கந்தவர்களுள் நான் சித்திர ரதர் சித்தர்களுள் நான் கபில முனிவர்.''

மரங்களில் பலவகை உண்டு எனினும் அவற்றில் ஆரச மரத்திற்குத் தனி மகத்வம் உண்டு. ஹிந்துக்களாகிய நாம் பலகாலமாக அரசமரத்தை தெய்வாம்சம் வாய்ந்ததாகக் கருதி வருகிறோம். அரசப் பிரதக்ஷிணத்




# கீதை காட்டும் நல்வழி

தைப் பற்றித் தெரியாத ஹிந்துவும் இருக்கமுடியுமோ? 'அச்வத்தம்' என் பதை ஆலமரம் என்று பொருள்படுத் துவாரும் உண்டு. அரசமரத்தின் இலை பூ, காய் போன்றவை அவ்வளவாகப் பயன்படாவிடினும், ஆத்ம சாதனை கள் யாவும் அதனுடன் தொடர்பு படுத்தப்பட்டுள்ளன. அரசமரத் தைப் பார்க்கையிலேயே இறைச் சிந் தனை நம்மிடம் தோன்ற வேண்டும். காற்றடிக்கையில் சலசலக்கும் அரச மரத்தின் இலைகள் கிளப்பும் ஒலி எவ் வளவு ரம்மியமாயிருக்கிறது! கண் களைச் சற்று மூடி அந்த ஒலியில் தியா னித்தால் அது 'ஓம்' 'ஓம்' என ஒலிப் பதை உணரலாம். ஆச்வத்த மரத் தின் பெருமை பற்றி விளக்கமாகப் பகவான் மீண்டும் 15-ம் அத்தியாயத தின் முதல சுலோகத்தில் எடுத்துரைக் கிறார் அநத விளக்கத்தைப் பின்னர் நாம் காண்போம்.

ரிஷிகள் அனைவருமே மகத்துவம் வாய்ந்தவர்கள், எனினும் அவர்களுள் நாரதர் தனிப்பெருமை வாய்ந்தவர். நாரதர் சிறந்த பக்தர் என்னும் பெருமை ஒரு புறம் இருக்க அவருக்கு மற்றொரு தனிப் பெருமையும் உண்டு. கலகப் பிரியர் நாரதர் என்பதுவே அது. தாம் சென்ற இடங்களிலெல் லாம் அவர் கலகங்களையே கிளப்பினார் எனினும் அந்தக் கலகங்களின் விளை வாக இறுதியில் மங்களமே உண்டா யிற்று என்ற உண்மையை நாம் மறந்து விடலாகாது. உடலில் நோய் தோன் றுவது எதற்காக? உடலுக்குள் புகுந்து விட்ட அல்லது உடலில் உள்ள கசடு களை அகற்றுவதற்காகத் தானே. அது போல தனி நபர்களிடத்துள்ள, சமு தாயத்திலுள்ள குறைபாடுகளை அவர் தமது கலகங்களின் மூலம் அகற்றி அருளினார். உதாரணமாக பார்வதி, லக்ஷ்மி, சரஸ்வதி ஆகியோரிடம் இரும்புக் கடலைகளைக் கொடுதது வறுக்கச் சொல்லி அவர்களை வெட்க முறச் செய்ததன் மூலம், அனசூயா வின் கற்பின் பெருமையை நிலைநாட்டி தேவியர் மூவரிடம் நிலவிய அவர்க ளது கற்பு பற்றிய கர்வத்தையும் அகற்றினார். இது ஒரு எடுத்துக்காட்டு. இதுபோல எத்தனையோ கூறலாம்.

கந்தவர்களில் சித்திர ரதன், முனி வர்களில் கபிலர், குதிரைகளில் உச்சை சிரவஸ், யானைகளுள் ஐராவதம், மனி தர்களுள் அரசனாகத் தாம் விளங்குவ தாகப் பகவான் பகருகிறார்: இவற் றுள் குறிப்பிட்ட சிலவற்றிற்கு மட்டும் நாம் விளக்கத்தைக் கீழேகாண்போம்.

அரசன் தெய்வத்துக்கு நிகர் என் பது நமது மரபு. மக்களைத் துன்பங்க ளிலிருந்து காத்து நன்முறையே ஆள்ப வன் எவனோ அவனே நல் அரசனாகி றான். மாறாகப் பிறப்புரிமையால் வெறும் அரசபதவியை அலங்கரிப்பவன் அரசனாகிவிடமாட்டான். அரச பதவி

திரு. டி. கே நாராயணன், M.Sc.,
ஆசிரியர் ''சமய ஜோதி'' மதுரை.

யில் இருப்பவர்கள அனைவரும்நல் அரசர் களால் விடமாட்டார்கள். யாரிடத்து தெயவாம்சம் பொருந்தியிருக்கிறதோ அவனே நல் அரசனாக முடியும். சிறந்த குதிரை, யானை, நரன ஆகியோரிடத் தில் இறைத்தன்மை விளங்குவதைப் பகவான் இங்கே குறிப்பிடுகிறார்.

''ஆயுதங்களில் நான் வஜ்ராயுதம். பசுக்களுள் காமதேனு. புத்ரோத்பத்தி செய்பவர்களிடத்து நான் மன்மதன். பாம்புகளுள் நான் வாஸுகி''—(28)

ஆயுதம என்ருல் கருவி என்று பொருள். ஆயுதங்கள் ஆக்கவும் பயன்படும். அழிக்கவும பயன்படும். தீயாரின் கொடுமையிலிருந்து நல்லாரைக காப்பதற்கு ஆயுதங்கள் பயன் படுததப்பட்டால் அவை பயனுடையவையாகினறன. சிவனுல் கையில உள்ள திரிசூலம், முருகன் கையில் உள்ள வேல், விஷ்ணுவின் கையில் உள்ள கதை, சக்கரம் போன்றவையெல்லாம் பல்வேறு தெய்வாம்சம் உள்ள ஆயுதங்களாகும். பகவான் இவற்றைப் பற்றி ஒன்றும் குறிப்பிடாமல் 'ஆயுதங்களில் நான் வஜ்ராயுதம்' என்று கூறுகிருரே! ஏன்? வஜ்ராயுதத்துக்கு ஏன் இவ்வளவு தனிப் பெருமை? ஆம், வஜ்ராயுதம் தியாகத்தின் சின்னமாகும்.

புராணத்தின் படி இந்திரனுல் பயன்படுத்தப்படும் ஆயுதங்களுள் வஜ்ராயுதம் தலை சிறந்தது. விருத்திராசுரனைக் கொல்ல அது பயன்படுத்தப் பட்டது. நைஷ்டிக பிரம்மச்சரியமும் மிகுந்த தபோவலிமையும் பெற்று விளங்கிய ததீசி என்ற முனிவர் தம்மையே தியாகம் செய்ததனுல் கிடைத்த அவரது முதுகெலும்பிலிருந்து வஜ்ராயுதம் செய்யப்பட்டது. அசுரர்களை அடக்கியொடுக்கத் தேவையான ஆயுதம் செய்ய அவரது எலும்பு தேவைப்படுகிறது என்று தேவர்கள் சென்று அவரிடம் கேட்டுக்கொணடவுடனேயே அவர் கொஞ்சமும் மனம் கோணுது மனமுவந்து உயிர்த்தியாகம் செய்தார். பின்னர் அவரது எலும்பின் உதவியுடன் வஜ்ராயுதம் செய்யப் பட்டது. தூய வாழ்க்கை வாழ்ந்த ததீசி முனிவரின் எலும்பு எவ்வாறு அசுரர்களை அடகக பயன்பட்டதோ, அதுபோல தூயவாழ்வு வாழ்ந்து மனிதன் தனது வாழ்வை சமுதாய நலனுக்குப் பயன்படுத்தவேண்டும் என்பதற்கு எடுத்துக் காட்டாக விளங்குவது வஜ்ராயுதம். வஜ்ராயுதம் நமக்குப் புகட்டும் பாடம் இதுவேயாகும்.

தேவர்களும் அசுரர்களும் பாற்கடலைக் கடைந்த பொழுது பல திரவியங்கள வெளி வந்தன. அவற்றில் ஒன்று காமதேனு. விரும்பியதைக் கொடுக்கவல்ல தெய்வீகப் பசுவாக அது விளங்கியது வசிஷ்ட மகரிஷியின் ஆசிரமத்தில் அது வாரி வாரி வற்ருத செல்வத்தைக் கொடுத்துக் கொண்டிருந்தது. முறைப்படி வேணடினுல்தான் காமதேனு நல்லதைக் கொடுககும். முறை தவறின் அது முறை தவறுவோருக்கு தண்டனையையும் அழிவையும் ஏற்படுத்தும் வல்லமை பெற்றது. இந்த இயற்கை ஈசுவர சொரூபம். அது தான் காமதேனு. இயற்கையை நாம் முறையாகப் பயன்படுத்தினுல், இயற்கையுடன் ஒட்டி நெறி பிறழாது வாழ்ந்தால் அது நமக்குப் பல நன்மைகளைத தரும். மாருக இயற்கையைத் தவருகப் பயன்படுத்தினுல் அது நம்மை அழித்துத் துடைத்து விடும். அணுசக்தி இதற்கு ஒரு நல்ல உதாரணம். அதை நாம் ஆக்கவேலைக்குப் பயன் படுத்தினுல் அதிலிருந்து நாம் எத்தனை எத்தனையோ நன்மைகளைப் பெறலாம். அணுசக்தியிலிருந்து அபரிமிதமான மின்சாரம் கிட்டும். அணுசகதியினுல் தொழிற்சாலைகளை இயக்கலாம், கப்பல்களை இயக்கலாம். இன்னும் என்னென்னவோ நாம் பல அதனுல் நமக்குக் கிட்டும். முறை தவறிக் கையாணடால் ஹைட்ரஜன் குணடு, அணுகுண்டு, நியூட்ரான் குண்டு போன்ற மிகக் கொடிய நாசகரமான ஆயுதங்களும் கிட்டும். எனவே நேரிய முறையில் செய்யப்படும் முயற்சியே முன்னேற்றத்திற்கும் மகிழ்ச்சிக்கும அடித்தளம் என்பதை இது காட்டுகிறது.

படைப்புக் கடவுளை நாம் பிரம்மா என்கிறேம். உலகையும, அதிலுள்ள பல்வேறு உயிர் வகைகளையும் படைத்த கடவுள் தமது படைப்புத் தொழிலைத் தொடர்ந்து நிகழ்த்துதற்கேற்ற சக்தியையும் அவைகளுக்கு அளித்திருக்கிருர். மிக நுட்பமான ஒரு செல் உயிராகட்டும், அல்லது 'படைப்பின் சிகரம்' எனத் தனனைப் பாராட்டிக் கொள்ளும மனிதனுகட்டும் அனைத்தும் தங்கள் இனத்தைப் பெருக்கவல்ல சக்தியைப் பெற்று விளங்குகின்றன. இன விருத்தி அல்லது பிரஜோத்பத்திக்கு அடிப்படையாயமைவது ஆண் பெண் வர்க்கத்திடையே உள்ள இயற்கையான கவர்ச்சியாகும். இனவிருத்தி தொடர்பான ஆசை மன்மதன் அல்லது கந்தர்ப்பனுக உருவகப்படுத்தப்படுகிறது. மனமத

ரதோற்சவம்—ஸ்ரீ ராஜகோபாலசுவாமி கோயில-ராஜமன்னுர்குடி
திரு. வி. எஸ். ஸ்ரீநிவாசன், தஞ்சாவூர்.



னுக்கு கண்பார்வை கிடையாது என்று சொல்வர். இதையே 'காதலுக்குக் கண் இல்லை' என்றும் நமமவர் பகர் கின்றனர். காதல் அல்லது அன்பின வயப்பட்டுத்தான உயிரினங்கள் ஒன்றை ஒன்று நேசிக்கின்றன. இன விருத்தியும செய்கின்றன. இந்த இச்சா சக்தியே உலகின் படைப்புககு அடிப்படைக் காரணமாகிறது. இனக் கவர்ச்சிக்குட்பட்டு பிறர்பால் செலுத் தப்படும காதல் கீழானது, மிருக உணர்ச்சியின் பால்பட்டது, அது ஒரு வனைக் களங்கப்படுத்துகிறது. மாருக இறைவன் பால வைக்கும் காதல் மேலானது, நிர்மலமானது, அது ஒரு வனை மேல் நிலைக்கு உயர்த்துகிறது. கடவுள் காதல் சொரூபம் என்பர் அறிஞர்.

'பாமபைக் கண்டால் படையும் நடுங்கும்' என்பது பழமொழி. ஸர்ப் பம் விஷமுடையது. விஷத்துடன் கூடி கொடூரமாக விளங்கினுலும நமது இந்து சமயத்தில் நாம் வழிபடும பல்வேறு தெய்வங்களுடன சர்ப்பமும தொடர்பு கொண்டுள்ளது. சிவபெரு மானுக்கு கண்டாபரணமாக சர்ப்பம் காட்சி தருகிறது விஷ்ணுவின் படுக் கையாக அமைவதும் ஆதிசேஷன் என்ற சர்ப்பமே. நாகராஜாவுக்கென பிரசித்தி பெற்ற பல கோயில்களும் நம் நாட்டில் உள்ளது. நாகர்கோவில் அதற்கு ஒரு நல்ல உதாரணம. பிர சித்தி பெற்ற பல கோவில்களில் பாம் புப் புற்றுக்குப்பால் வார்ப்பது என்பது நாம் அன்ருடம் காணும் ஒரு காட்சி யேயாகும் நாக பஞ்சமி தினத்தன்று பிரத்தியேகமாக சர்ப்ப வழிபாடு நிகழும். ஆலயங்களிலுள்ள வாகனங் கள் பலவற்றில் சேஷ வாகனமும் ஒன்ருகும். விநாயகப் பெருமாளின் வயிற்றைச் சுற்றிலும் வார் போலக் கட்டப்பட்டிருப்பது சர்ப்பமேயாகும். சாப்பம் கடவுளின் சகதிக்கு ஒரு சின் னமாக விளங்குகிறது.

மனிதனிடத்தில் அவனது மூலா தாரததில் மறைநது கிடககும் சகதி சர்ப்ப வடிவில் உள்ளது என்கின்ற னர் ஆன்றோர். ஜப, தப, தியானப் பயிறசிகள் மூலம் இந்தக் 'குண்டலினி சக்தி' மேல் நோக்கிச் செல்லுகையில் ஒருவனிடம் பல சித்திகளும் சக்தி களும் வந்து வாய்க்கின்றன.

விஷம் துன்பத்தைக் குறிக்கிறது. பாம்பின் விஷம் உயிரையும் எடுக்கும், அதே வேளையில் அதே விஷத்தைப் பக்குவமாகச் சிறிய அளவில் பயன் படுத்தினுல் அது அருமருந்தாகி உயி ரையும் கொடுக்கவல்லதாகிறது என் பது மருத்துவர்களின் கருத்து. நன்மை தீமை இரணடும் கலநததே உலகம் என்பதை அது குறிக்கிறது. துன்பத் தைக் குறிப்பது விஷம. துன்பம் அனை வருக்கும் பொதுவானது. பாற்கடலைக் கடைவதற்கு வாசுகி என்ற விஷப் பாம்பு பயன்பட்டது. சக்தியைப் பயன்படுத்தி கடின உழைப்பில் ஈடு பட்டால்தான் வாழ்வில் பேறுகள் பலவற்றைப் பெறமுடியும். வாசுகி யைக் கொண்டு பாற்கடலைக் கடைந்த பொழுது பல திரவியங்களைப் பங்கு போடப் போட்டி போட்டவர்கள் அனைவரும் விஷம் வந்தவுடன் பயந்து போய் ஓட்டம் பிடித்தார்கள். ஆனுல் ஆலத்தை அமுதாக்கவல்ல சிவபெரு மான் அதைத் தன் கண்டத்தில் ஏற் றுக் கொண்டார். எனவே தான் அவர் திருநீலகண்டர் என அழைக்கப்படு கிருர். இறைவனது படைப்பில் நலம் கேடு இரண்டிற்கும் இடமுண்டு. 'எல் லாம் நன்மைக்கே' என்ற நோக்கு டன் இரண்டையும் நாம் சமதிருஷ்டி யுடன் பார்க்கப் பழகிக் கொள்ள வேண்டும்.



ஸ்ரீ மலையபப சுவாமி-திருப்பதி.

'அடக்கியாள்பவர்களுள் நான் யமன்' என்கிருர் பகவான. மனிதர் களுள் பாண்டவாகளில மூத்தவரான யுதிஷ்டிரர் தருமபுத்திரர் எனப்படு கிருர். தேவர்களுள் யமன் தர்மராஜா எனப்படுகிருர். தர்மம் என்பது யம னையே குறிக்கும். யமதர்மராஜன் என்றே நாம் யமனை அழைக்கிறேம். யமனது ஆட்சியில் அநீதிக்கே இட மில்லை. அது நீதி சிறிதும் பிறழாத ஆட்சி. லஞ்சம், ஊழல் எதுவும் அறவே அற்ற ஆட்சி. 'இவன் வேண்டி யவன், இவன் வேண்டாதவன்; இவன் படித்தவன், இவன் பாமரன்: இவள் அழகி, இவள் குரூபி; இவன் கிழவன் இவன குமரன்: இவன் கருப்பன், இவன் வெளுப்பன்; இவன் நல்லவன் இவன் கெட்டவன்' — என்பன போன்ற பாகுபாடு பாராட்டாது எது நியாயமோ அதைத் தயங்காது செய்ய வேண்டும். தமக்கு வேண்டிய வர்கள் என்ருல் தண்டிக்கப்படவேண் டிய அயோக்கியனுக்கும் விடுதலை, தமக்கு வேண்டாதவர்கள் என்ருல் செய்யாத குற்றத்திற்கும் தண்டனை

என்ற விதத்தில ஆட்சி செலுத்துப வர்கள் ஆளத் தகுதியற்றவர்கள். நெறி பிறழாதவாகளே ஆளத்தகுதி உடையவர்கள். அற வழி நின்று ஆள் வதால தமமை, அடககியா ளபவர்க ளுள் யமன என்று பகவான் சொல்லிக் கொள்கிருர்.

''தைத்தியர்களுள் நான் பிரஹ்லா தன கணக்கிடுபவர்களுள் நான் காலன். மிருகங்களுள் நான் சிங்கம். பறவைகளுள நான் கருடன்''

தக்ஷப்பிரஜாதிபதியினுடைய புதல் விக்குத் திதி என்று பெயர். அவள் பெற்றெடுத்த பிள்ளைகளுக்கு தைத்தி யர்கள் என்று பெயர். வைத்தியர் கள் அனைவரும தேவாகளுக்குப் பகைவா ஆவா அந்த தைத்தியர்க ளில ஒருவரான கொடிய ஹிரணயகசி புவுக்கு மகனுகப் பிரஹ்லாதன் பிறந் தான். தந்தை எவ்வளவுக்கெவ்வளவு விஷ்ணுவுக்கு எதிரியாக விளங்கினுனே அந்த அளவு பிரஹ்லாதன் விஷ்ணு பக்தனுக விளங்கினுன். கீழ்மக்கள் கூட்டத்திலும் மேலோா தோன்றக் கூடும் என்பதற்கு பிரஹ்லாதன் ஒரு எடுத்துக்காட்டு. பகவானிடம் அபார பக்தி ஒன்று மட்டும இருந்தால் போதும, யாரும் பகவானை அடைய லாம் என்பதற்கு பிரஹ்லாத சரித்தி ரம ஒரு எடுத்துக்காட்டு. எத்தனை எத்தனை இடுக்கணகள் நேரிடினும் பக வத் பக்தி என்னும் எதிர்ப்புக் கவசத் தால் அவற்றை விலக்கி வெற்றிகொள் ளலாம் என்பதே பிரஹ்லாதன் புகட் டும் பாடம. எனவே களைகளிடையே முளைத்த பயிரைப் போன்ற பக்த சிகாமணி பிரஹ்லாதனைத் தமது சொரூபம் என்று பகவான் பெருமை யுடன் சொல்லிக் கொள்கிருர்.

(தொடரும்)

## தி. தி. தேவஸ்தான தமிழ் சமய வெளியீடுகள்

| | | ரூ. | பை |
|---|---|---|---|
| அஷ்டோத்ர சகஸ்ரநாம அர்ச்சனை | ... | 1 | 00 |
| பாலசரிதம் (திரு. ஆர். ஸ்ரீநிவாச ராகவாச்சாாயா) | ... | 0 | 75 |
| பால பாகவதம் (செவ்வைச் சூடுவார்) முதல் பாகம | ... | 4 | 00 |
| ,, ,, இரணடாம் பாகம் | ... | 4 | 00 |
| தசரூபகம் (திரு. ஆர். ஸ்ரீநிவாச ராகவாச்சார்யா) | ... | 3 | 50 |
| குருபரம்பரை (திரு. கே. பாலசுந்தர நாயக்கர்) | ... | 3 | 00 |
| திருமலை வழிகாட்டி | ... | 0 | 25 |
| ஸ்ரீ வேங்கடேஸ்வரர் மகாத்மியம் (தலபுராணம்) | ... | 2 | 00 |
| ஸித்தாந்த த்ரய சங்க்ரஹம் (திரு. ஓ. வி. கபிஸ்தலம் தேசிகாச்சார்யா) | ... | 2 | 50 |
| ஸ்ரீராமஜெயத் திருப்புகழ் பகுதி I, பகுதி II. (Each) (திரு. கே. பாலசுந்தர நாயக்கர்) | ... | 3 | 00 |
| சர்வ தேவதா பூஜா விதானம் – தி. தி. தே – | ... | 0 | 70 |
| ஸுப்ரபாதம் (பொருளுடன்) ,, | ... | 0 | 50 |
| ஸுப்ரபாதம் ,, | ... | 0 | 12 |
| செம்பொருள் (எஸ். கிருஷ்ணவேணி அம்மையார்) | ... | 1 | 50 |
| ஸ்ரீநிவாச கல்யாணம் (வண்ணப்படங்களுடன்) | ... | 11 | 50 |
| திருக்குறள் (பொருட்பால்) திரு.டி.பி. பழனியப்பபிள்ளை | ... | 7 | 50 |
| ,, (காமத்துப்பால்) (தொகுத்தவர்) | ... | 4 | 00 |
| திருவாய்மொழி (விளக்கவுரையுடன்) பாகம் 1 | ... | 7 | 50 |
| (திரு. டி. பி. பழனியப்ப பிள்ளை) பாகம் 2 | ... | 10 | 50 |
| யாப்பொளி (திரு. ஆர். ஸ்ரீநிவாச ராகவாச்சார்யா) | ... | 3 | 50 |
| ஸ்ரீ கபிலேஸ்வர சுவாமி ஸுப்ரபாதம் (திரு. எம். வி. ராமநாத கனபாடிகள் | ... | 0 | 20 |
| நித்யாநுஸநதானம் – தி. தி. தே – | ... | 3 | 75 |
| ஏழுமலை யாத்திரை (திரு. டி. கே. நாராயணன்) | ... | 4 | 00 |
| சித்திர ஸுப்ரபாதம் (வண்ணப்படங்களுடன்) தி தி.தே - | ... | 8 | 00 |

### தி. தி. தேவஸ்தான வெளியீடுகளுக்கான விற்பனை சலுகை விவரங்கள்

தி. தி. தேவஸ்தான கல்வெட்டு அறிக்கைகள், தி. தி. தேவஸ்தான கல்வெட்டுத் தொகுதி 1 மற்றும் தொகுதி 5 ஆக மூன்று நூல்களுக்கு, செட்டாக வாங்குவோர்க்கு, $12\frac{1}{2}$% தள்ளுபடி வழங்கப்படும்.

'ஸ்ரீ அன்னமாச்சார்யா சங்கீர்த்தனமுலு' மற்றும் 'தாள்ளபாக்கா பணிகள்' ஆகிய 6 தொகுதிகளை (தெலுங்கு) ஒருமித்துவாங்கினுல் $12\frac{1}{2}$% தள்ளுபடி வழங்கப்படும்.

ரூ. 100 அல்லது அதற்கு மேற்பட்டு விளங்கும் விற்பனைக்கு $12\frac{1}{2}$%, ரூ. 500/- லிருந்து ரூ. 1000/- வரை விளங்கும் விற்பனைக்கு 20%, ரூ. 1000/-க்கு மேல் இருக்கும் விற்பனைக்கு 30% என்றவாறு கமிஷன் வழங்கப்படும். ரூ. 100/-க்கு மேற்பட்டு சரக்காணைகள் விளங்கினுல், அவற்றிற்கான தபால் செலவினை தி. தி. தேஸ்வதானம் ஏற்கும்.

தொடர் கட்டுரை

# அனுமன் கதை

(இவ்விதழுடன் முடியவிருக்கும் இக்கட்டுரையின் ஆசிரியர் திரு. எம் சீதாராமன் M A., BEd., அவர்களுக்கும் ஸப்தகிரிக்கும் வெகுகால மாகவே நெருங்கிய தொடர்பு உண்டு. ஆம்! பல ஆண்டுகளாகவே அவரு டைய கட்டுரைகள், கவிதைகள் ஸப்தகிரியில் வெளியிடப்பட்டு வருகின் றன. 1962-ல் தமிழ்ப் புலவர் தேர்வில் தேர்ச்சி பெற்று, பின்னர் தன் சுய முயற்சியால் தமிழில் எம்.ஏ. பட்டமும் பெற்றார். 1972-ம் ஆண்டு திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாரின் ஆதரவில் திருமலையில் நடைபெற்ற கோடை இந்து சமய வகுப்பில் பங்கேற்று, மேற்படி நிறுவனம் நடத்திய தேர்வில் முதலாவதாக தேர்ச்சி பெற்று முதல் பரிசும் பெற்ற இவர், தற் போது திமிரி மேநிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணிபுரிந்து வரு கின்றார்)



திரு. மா. சீதாராமன், M.A., BEd.
பெருங்கட்டூர்.

## 25. தெய்வமாய் அருள்கிறார்!

தக்க இன்ன தகாதன இன்னவென்
றொக்க வுன்னல ராயின உயர்ந்துள்
மக்க ளுமவிலங் கேமனு வின்னெறி
புக்க வேலவ் விலங்கும் புத்தேளிரே!

(357, வாலி வதைப் படலம்,
கிஷ்கிந்தா காண்டம்.)

பாரத காலத்திற்குப் பின்னரும், சிரஞ்சீவியாகிய அநுமார் வாழ்ந்து வருகிறார். இக்கலியுகத்தில் கண்கண்ட கடவுளாக இவர் போற்றப்பட்டு வரு கிறார். திரேதா யுகத்தில், திருமலை யில ஆகாசகங்கை அருகில தோன்றிய ஆஞ்சநேயர் யுகங்கள் தோறும் வாழ்ந்து அனைவர்க்கும் அருள் பாலித்து வருகிறார். வீமனுக்கும் அருச்சுனனுக்கும் அருள்புரிந்த ஆஞ்ச நேயர் பிற்காலத்தில் நிகழ்த்திய அற் புதங்கள் பல. சிவபிரானின் அம்ச மாக விளங்கும ஆஞ்சநேயரை, வைண வர்கள் சிறிய திருவடி எனச் சிறப் பித்துக் கூறுவர். இவரின் சிறப்பினைக் கருதி, வைணவ ஆலயங்களில் இவரை வழிபடும் வழக்கம் இன்றும் பரவ லாகக் காணப்படுகிறது. பெருமாளின் திருமேனியைத் தாங்கும் வாகனமாக வும் இவர் உதவி வருகிறார்.

அநுமருக்கெனத் தனியே ஆலயங் களும் உள்ளன. ஓரிரு ஊர்களைத் தவிர, தமிழகத்தின் ஊர்கள் பலவற்றி லும் ஆஞ்சநேயர் கோயில்களை இன்று நாம் காண்கிறோம். குறிக்கத்தக்க தலங்கள சிலவற்றை மட்டும் இங்கே காணபோம்.

நாமக்கல்லிலும், சுசீந்திரத்திலும் உள்ள மூர்த்தங்கள் மிகப் பெரியவை. இம்மூர்த்தங்கள் கண்படைத்தோரால் காணத்தக்கவை. இவை பதினெட் டடி உயரத்திற்குக் காட்சி தருகின் றன.

காஞ்சிபுரத்தில் இவருக்கென்று கோயில்கள் பல உள்ளன. உல களந்தப் பெருமாள கோயிலுக்கு எதிரில சதுர்புஜ ஆஞ்சநேயா காட்சி தருகிறார். ஏகாமபர நாதர் சந்நிதிக்கு எதிரில் உள்ள பதினாறு கால் மண டபத் தூண் ஒன்றில் நின்று காட்சி யளிக்கும ஆஞ்சநேயர் சக்தி வாய்ந்த வராகக் கருதப்படுகிறார். வரதராசப் பெருமாள் தேரடிக்கருகில் அமைந் துள்ள ஆலயம் பிரசித்தி பெற்றது சிவபிரானை வழிபடும் நிலையில் உள்ள ஆஞ்சநேயர் கைலாசநாதர் கோயிலில் காட்சி தருகிறார். இங்குதான் இராம பிரான் அநுமருக்கு 108 உபநிடதங் களையும் உபதேசித்தாராம்.

காஞ்சிபுரத்தையடுத்த ஐயங்கார் குளத்திலும் அநுமருக்கென்று ஆலயம் ஒன்றுண்டு. காஞ்சிபுரம் கோடி கன் யாதானம் இலக்ஷ்மீ குமாரநாத தேசி கன் என்பவர் அநுமரை உபாசித்து வந்தாராம். உபாசனா மூர்த்தியாகிய ஆஞ்சநேயர் அவருக்குத் திருக்குளம் ஒன்றைத் தோண்டி உதவினாராம். எனவே, உபாசனா மூர்த்தியாகிய ஆஞ்சநேயருக்கு அந்த ஐயங்கார் திருக்கோவில் ஒன்றை எழுப்பி வழி பட்டாராம. எனவே, இவ்வூர் இன்று ஐயங்கார் குளம் என்ற பெயராலேயே வழங்கி வருகிறது.

ஆரணிக்கருகேயுள்ள துஸ்தம்பாடி, சோழலிங்கபுரம், இந்தளூர், ஈரோடு, ஊத்துக்குளி, கபித்தலம், காரை மடை, குடந்தை, குருந்தமலை, சண்ப காரண்யம், சிருங்கிரி, சிவன்மலை, செங் கற்பட்டு, மாம்பலம் சிவவிஷ்ணு கோயில், வட பழனி ஆண்டவர் கோயில், திருவல்லிக்கேணி பார்த்த சாரதி கோயில், சேலூர், தான் தோன்றி, திருக்கண்ணங்குடி, திருக் கரம்பனூர், திருச்சி புகைவண்டி நிலை யம், திருச்செங்கோடு, திருநாராயண புரம், தோவாளை, நீடாமங்கலம், நைனமலை, பட்டீசுரம், படைவீடு, பத்மநாபபுரம், பாண்டிக்கொடி முடி, மகாபலிபுரம், மகேந்திர கிரி, மருந்து வாழ்மலை, மணி மங்கலம், மதுராந் தகம், மதுரை, மொண்டிப் பாளையம்,

மேல் பாடி, இராமேசுவரம், ஸ்ரீமுஷ்ணம், ஸ்ரீவைகுண்டம் ஆகிய தலங்களில் உள்ள அநுமார் கோயில்கள் பிரசித்தமானவை. இத்தலங்களில் மட்டுமின்றி பிறவிடங்களிலும் அநுமார் கோயில்கள் காணப்படுகின்றன.

தமிழகத்தில் மட்டுமன்றிப் பிற மாநிலங்களிலும் அநுமார் கோயில்களைக் காண முடிகிறது. தமிழகத்தைப் போலவே, ஆந்திராவிலும் அநுமன் கோயில்கள் பரவலாக நாட்டுப புறங்களிலும் காணப்படுகின்றன அநும வழிபாடு ஆந்திராவில் பிரசித்தம். கேரளம், பஞ்சாப், மகாராஷ்டிரம், மத்திய பிரதேசம, மைசூர், இராஜஸ்தான முதலான பிற நாடுகளிலும் மாருதிக்குக் கோயில்கள் உள்ளன. இந்தியாவில் மட்டுமின்றி இலங்கை, ஜாவா முதலான பிறநாடுகளிலும் ஆஞ்சநேயர் கோயில் கொண்டுள்ளார்.

தலங்களால் சிறந்து விளங்கும் அநுமருக்கு மூர்த்திச் சிறப்பும் உண்டு: இவருடைய மூர்த்தங்கள் பலவகையாக அமைந்துள்ளன.

பக்த ஆஞ்சநேயர், வீர ஆஞ்சநேயர் என்னும் நிலைகளில் அநுமருக்கு மூர்த்தங்கள் அமைப்பது வழக்கம், சஞ்சீவி மலையைக் கொண்டு வரும் நிலையிலும், கூப்பிய கரங்களுடன கூடிய நிலையிலும், இதயத்தைப் பிளந்து காட்டி சீதாராமரைப் புலப்படுத்தும் நிலையிலும், சீதாராம லக்குவரை வணங்கி நிற்கும நிலையிலும மூர்த்திகள் பலவாறுகக் காட்சி தரும்.

மூன்று கண்களுடனும் பத்துக் கைகளுடனும பொலிவுற விளங்கும் ஆஞ்ச நேயரைத் திருக்கடவூருக்குக் கிழக்கேயுள்ள அனந்த மங்கலம் ராச கோபால சுவாமி ஆலயத்தில் தரிசிக்கலாம். இவரைத் திரிநேத்திர தசபுஜ அநுமர் என அழைப்பர். சிவன், திருமால், இந்திரன், எமன் ஆகியோரின் ஆயுதங்கள் அனைத்தையும் ஒருங்கே தாங்கிக் காட்சியளிக்கும் இம்மூர்த்தி வியப்பிற்குரியவர்.



சதுர்புஜ ஆஞ்சநேயரின் கைகளில் சங்கு, சக்கரம் காணப்படும். காஞ்சிபுரத்திலும் (உலகளந்த பெருமாள் கோயிலுக்கு முன்) சிங்கபுரத்திலும் சதுர்புஜ ஆஞ்சநேயரைத் தரிசிக்லாம்.

வராகர், கருடர், ஆஞ்சநேயர், நரசிம்மர், அயக்ரீவர் ஆகிய ஐநது முகங்களோடு கூடிய மூர்த்தியையே பஞ்சமுக ஆஞ்சநேயர் என்பர். காஞ்சிபுரம் ஏகாம்பர நாதர் ஆலயத்தின் முன் மண்டபத்திலும், சிருங்கிரியிலும், அனந்த மங்கலத்திலும் இம்மூர்த்தியைக் கண்டு அருள் பெறலாம்.

வால் அறுபட்ட மூர்த்தியை இராமேசுவரத்தில் வழி படலாம். குழந்தை வடிவோடு கோவணாண்டியாகக் காட்சி தரும் பால ரூப ஆஞ்சநேயரை உடுப்பிக்குக் கிழக்கே மூன்று மைல் தொலைவில் உள்ள துர்க்கைக் கோயில் குளக்கரையில் தரிசிக்கலாம். இயந்திரத்திற்குள் அடைபட்டுக் காட்சி தரும் அமர்ந்த நிலையோடு கூடிய மூர்த்தியை அம்பியில் வழிபடலாம். இவ்வாறு அநுமரது மூர்த்தங்கள் பலவாறுகக் காட்சி தரினும், அவரின் அருளும் சக்தி மட்டும் ஒரே விதமாகவே உள்ளது.

தலங்கள் பலவற்றில், மூர்த்தங்கள பலவாக எழுநதருளி அநுமார் அருள வழங்குவதைப் போலவே, தீர்த்தங்கள முலமாகவும் அவர் மககளுககு அருள் புரிநது வருகின்றார. அநுமர் பெயராலேயே தீாத்தங்கள பல வழங்கி வருகின்றன. அநுமன் தீாததம என ஒரு தலம் தருமபுரி மாவட்டத்தில் உளளது. இங்குள்ள ஆற்றின் நடுவே ஆஞ்சநேயரின் திருவுருவம் காணப் படுகிறது. கரையில் கோயில் ஒனறும் காட்சியளிக்கிறது. ஆற்றில் உள்ள ஆஞ்சநேயரின் திருவாயிலிருந்து ஊற்றெடுக்கும் நீரில் நீராடித் தம் பாவத்தைப் போக்கிக் கொள்ள நாள் தோறும் அடியவர்கள் இஙகு வந்த வண்ணமிருக்கின்றனர். அழகர் கோயிலிலும் அநுமன் தீர்த்தம் ஒன்று இருக்கிறது. நாமக்கல்லைச் சுற்றியுள்ள ஒன்பது தீர்த்தங்களில் ஒன்று அநுமன் தீர்த்தம் என்ற பெயரால் வழங்கப் படுகிறது. இத்தீர்த்தங்களில் முழுகி எழுவோரைப் பில்லி, சூனியம், ஏவல், பைசாசம் ஆகியவை ஆண்டுவதில்லை என்று அநுபவித்தறிந்தவர்கள் கூறுகிறார்கள்.

தலம், மூாத்தி, தீர்த்தம் ஆகிய மூன்றாலும் சிறப்புற்று விளங்கும் ஆஞ்ச நேயப்பெருமானை அன்புடன் உபாசித்துப் பலன் பெற்றவர் பலர். தங்கள் கோரிககையை நிறைவேற்ற வேணடிப் பயபக்தியுடன் நாள்தோறும் அநுமரை வழிபடுவோரும் உளர். கோயிலும், குளமும் அமைத்துக் கொணடாடும் அன்பர்களும் இருக்கின்றனர். விழா எடுத்து மகிழ்பவரும், வடைமாலை சாத்தி வழிபடுவோரும், கும்பிட்டுக் குறை தீர்க்க வேண்டுவோரும் அநுமர் திருக்கோயிலின் முன்னர்க் குழுமியிருப்பதை நாம் கண்டுகளிக்கிறோம். அனைவர்க்கும் வரையாது அருள் வழங்குகிறார் ஆஞ்சநேயப் பெருமான்.

நரங்கினத்தில் பிறந்த ஆஞ்ச நேயருக்கு இத்தகைய பெருமை எப்படி ஏற்பட்டது? இதுபற்றிச் சிறிது ஆராயவோம.

அநுமர் பிறநதது வானர குலத் தில! வானரமாகப் பிறந்த அநுமரிடம் வானரங்களுக்குரிய குணங்கள் ஒரு சிறிதும் காணப்படவில்லை. சலன புத்தியும், விரும்புமு பெணகளுடன சேர்தலும் வானரங்களுக்குரிய இயல்பு கள். இவ்வியல்புகள் இவரிடம் ஒரு போதும காணப்படவில்லை. உடலால் அவர் வானரமேயன்றி, உள்ளத்தால் அவர் ஒரு சிறந்த மனிதராகவே காணப்பட்டார்

விலங்குகள் கல்வி கற்பதில்லை. ஆனல், அநுமர் கற்ற கலைக்கோ அளவேயில்லை. அவர் கல்வி கறற முறை மாணவர்கட்கெல்லாம் எடுத் துக் காட்டாகத் திகழக் கூடியது. கற் பவர்க்கு விரைவு, தெளிவு, ஆர்வம், நுட்பம் முதலியன அமைந்திருத்தல் வேண்டும். இப்பண்புகள் இவரிடம் அமைந்திருந்தன இவருக்குக் கலை களைக் கற்றுத் தந்தவர் சூரியன் விரைந்து செல்பவர். அவரைப் பின் தொடர்நது சென்று, அவர் சுழல் கதிக்கு ஏற்பத் தானும் அமைந்து, விரைந்து கலைகளைப் புரிந்து கொண் டவர் ஆஞ்சநேயர். ''காதல நான் முகனுலும கணிப்பரிய கலையனைத்துமு கதிரோன முன் சென்று ஓதினன்!'' எனவும்,

''பணடை நூல் கதிரோன் சொல் லப் படித்தனன்'' எனவும் வரும அடி கள் இவா கதிரவனிடம் கல்வி கற்றுர் எனபதை விளக்கி நிற்கின்றன.

எனவே, இவர் கலை வல்லார் என் பதில் ஐயமில்லை. கல்வி கற்றதனுல், இவர் விலங்கு நிலையிலிருந்தும் மனித நிலைக்கு உயர்ந்துவிட்டார் மனித ராகப் பிறந்தவர்கள் கல்லாத விலங்கு களாகத் திரிவதைக் காணும் நமக்கு, விலங்காகப் பிறந்த அநுமரின் கலை யாறறல நமக்கு வியப்பையே தருகிற தன்றோ?

கலவியறிவு மிகுந்திருந்த காரணத் தால்தான யாரிடம எப்படிப் பேச வேணடும் என்கின்ற முறை அவருக்கு நன்ருகத் தெரிந்திருந்தது. முதன் முதலாக, அநுமரை இராமபிரான் கணடு உரையாடியபோது அநுமரின் சொல்லாற்றலைக கண்டு இராம பிரானே வியப்படைகின்றுர். மரம தோறும் தாவும் வானரமாக, இராமா கண்களுக்கு அநுமார புலப்படவில்லை. ''பிரம்மனே! சிவனே!'' என்று அநு மரைக கண்டு இராகவர் வியக்கின் றுர். இராகவன் வியப்புக்குக் காரணம் கலைநயம மலிந்த அநுமரின சொல்லாற்றலே யாகும இராகவர் வியந்து கூறும் கூற்றினைக் கமபர் வாக்கால் காணபோம்:

இல்லாத உலகத தெங்கு மீங்கிவ
னிசைகள கூரக
கல்லாத கலையும வேதக கடலுமே
என்னும் காட்சி
சொலலாலே தோனறிற றனறே
யார்கொலிச் சொலலின் செலவன
விலலாதோள் இளைய வீர விரிஞ்சனே
விடைவல் லானே!

(63, அநுமப்படலம், கிஷ்கிந்தா காண்டம்)

நன்கு பேசத் தெரிந்தவரே தூது வராதல் முடியும் இராவணன் பால் தூது செல்வதற்காக அநுமாரைத் தேர்ந்தெடுத்ததும் சொல்லாற்றல கருதியேயாம் அநுமரின் சொல் லாற்றல அற்புதமானது. அவா பேச்சைக் கேட்போர், பகைவரையா யினும் அவர் பேச்சில் மயங்கி விடு வர் சொற்களை ஆராய்ந்து பார்த்து, தன் கருத்தினை வலியுறுத்திப் பேசு வதில் இவா வல்லவர்; காரண காரி யங்களை எடுத்துக் காட்டி அழகுறப் பேசும் ஆற்றல மிக்கவர்; தான் கூறப் போகும் கருத்துக்களை வகைப்படுத்திக கொண்டு சலிப்பில்லாமல் பேசும சமர்த்தர்; காலமறிந்து, இடமறிந்து, குறிப்பறிந்து பேசும் இயல்பினர். இவர் பேச்சாறறலைக் கணடு இராவ ணனே வியப்படைவதைக காண போம

''நேரியோ குலிசியோ நெடுங்க
ணிசசியோ
தாமரைக் கிழவனே தறுகண
மலைப
பூமிதாங கொ நவனே பொருது
முறறுவான்
நாமமும் உருவமும கரந்து
நணணியை.''

(70, பிணி வீட்டுப் படலம்.)

அநுமரைக கணடு இராகவர் வியந் தது போலவே, இராவணனும வியப் படைகிறுன். இராவணன் கண் களுக்குச் சாதாரண வானரமாக அநு மாா புலபபடவிலலை காரணம் எனன? அநுமரின கலவியறிவே அரக் கனுகிய இராவணனையும திகைகக வைததது!

கல்வி கற்றுப் பேசத் தெரிந்து விட் டால் மட்டும போதுமா? தூதுவராக உள்ளவர்க்குப் போர் புரிவதற்கான உடலாறறலும நன்கு அமைநதிருத் தல் வேண்டுமன்றே! அநுமரின் உட

ஸ்ரீ வேஙகடேஸ்வரர் உற்சவமூர்த்தி திருமலை.



கும் சந்நிதிகள் இருக்கின்றன. இவா களை வணங்குகின்றோம். இடைநிலைக் கோபுரத்தை அடுத்துள்ள கொடி மரத்தைத் தாண்டிக் கொண்டு அப் பிராகாரத்திற்குச் செல்லுகின்றோம். இங்கு முதலில் நாம் காண்பது மாதவிப் பந்தல். அந்தப் பிராகாரத் தைச் சுற்றினால் நூற்றெட்டுத் திருப் பதி எம்பெருமான்களும் நமக்குச் சேவை சாதிப்பார்கள். அழகிய பன் னிற வண்ணங்களில் அவர்கள் ஓவிய வடிவங்களில் நமக்குக் காட்சி நல்கு கின்றனர். இவற்றையெல்லாம் கண்டு களித்தவண்ணம் மாதவிப் பந்தல், மணிமண்டபம் ஆண்டாள் சுக்கிர வாரக்குறடு ஆகியவற்றைக் கடந்து அர்த்த மண்டபத்திற்கு வருகின்றோம்.

அர்த்த மண்டபத்திற்கு அடுத்து இருப்பதுதான் கருவறை. இங்குத் தான் ஆண்டாள், அரங்கமன்னர், பெரிய திருவடி ஆகிய மூவரும் சேவை சாதிக்கின்றனர். நடுவில் அரங்க மன்னரும், அவருக்கு வலப்பக்கத்தில் ஆண்டாளும் இடப்பக்கத்தில் பெரிய திருவடியும் எழுந்தருளியுள்ளனர். இங்கு நாம் வந்ததும்,

"கோலச் சுரி சங்கை மாயன்செவ் வாயின் குணம் வினவும்
சீலத் தனள், தென் திருமல்லிநாடி, செழுங்குழல் மேல்
மாலைத் தொடைதென் னரங்கருக் கீயும் மதிப்புடைய
சோலைக்கிளி, அவள் தூயநற் பாதம் துணை நமக்கே"

(நாச்சியார் திருமொழித் தனியன்)

என்ற பாசுரத்தை மிடற்றொலியில் சேவித்து அன்னையாரை வணங்கு கின்றோம். அரங்கநாதர் திருமணக் கோலத்துடன் கூடிய அரச கோலத் தில் இராச கோபாலனுக்கு கையில் செங்கோல் ஏந்திய வண்ணம் காட்சி நல்குகின்றார். ஆண்டாள் கோலங்கள் யாவும் புனைந்த கோமகளாக அவர் பக்கத்தில் நிற்கின்றார். ஏனைய திருக் கோயில்களில் எம்பெருமானுக்கு எதிரே நின்று சேவை சாதிக்கும் கரு டாழ்வார் அரங்கநாதர் பக்கத்தில் ஏகாங்கியாய் எழுந்தருளியிருப்பதன் காரணத்தைச் சிந்திக்கின்றோம். ஆண்டாளை மணம் புரிவதற்கு அரங்க நகரிலிருந்து அரங்கநகர் அப்பனைக் காற்றினும் கடுகிய வேகத்துடன் வில்லிபுத்தூரில் கொண்டு வந்து சேர்த்த பெருமகனல்லவா இவர்? அந்தக் கைங்கர்யத்தின் நினைவாக அரங்கமன்னார் அவரைத் தனனருகி லேயே வைத்துக் கொண்டார் போலும். மூலவர்கட்கு முன்னால் தங்கத்தாலான கோபால மஞ்சத்தில் உற்சவர்களாகவும் இம்மூவரும் எழுந்தருளியிருப்பதையும் காண் கின்றோம். இவர்களைச் சேவித்த பிறகு வடபத்திரசாயியின் (ஆலிலைப் பள்ளியான்) திருக்கோயிலுக்குப் போகச் சித்தமாகின்றோம்.

ஆண்டாள் கோயிலை விட்டு வெளி வந்து வடகிழக்கு நோக்கி நடந்து வருங்கால் வழியில் ஆண்டாள் அவ தரித்த நந்தவனத்தையும் அங்குள்ள கோயிலில் சிலை வடிவத்திலுள்ள ஆண்டாளின் தனி உருவத்தையும் காண்கின்றோம். அந்த அன்னையாரை யும் சேவித்து வடக்கு நோக்கி நடந்து ஆலிலைப்பள்ளியானின் ஆலயத்தை அடைகின்றோம். கோயிலின் வாயிலைப் பெரியதொரு கோபுரம் அணி செய்கின்றது. இவ்வளவு உயர மான கோபுரம் வேறு எங்கும் இல்லை என்று சொல்லப் பெறுகின்றது. இதனைக் கேட்குங்கால் திருவண்ணா மலையின் மிகப்பெரிய கோபுரம் நம நினைவுக்கு வருகின்றது. இக்கோபுர வாயிலை அடுத்த வடபுறம் தெற்கு நோக்கியவண்ணம் இருக்கும் பெரி யாழ்வார் சந்நிதியைக்காண்கின்றோம். பெரியாழ்வார் தோன்றிய இட மாதலின் அவருக்கு இங்குச் சாத்து முறை மிகச் சிறப்பாக நடைபெறு கின்றது.

பெரியாழ்வார் சந்நிதியை அடுத்து மேற்குப் புறமாக உள்ளது ஆலிலைப் பள்ளியானின் சந்நிதியாகும். இந்தத் திருக்கோயிலில் இரண்டு தளங்கள் உள்ளன. கீழ்த்தளத்தில் நரசிங்கப் பெருமாள் சந்நிதி உள்ளது. இச் சந்நிதிக்குக் கிழக்கே வடபுறம் பன் னிரண்டு ஆள்வார்களும் தசாவதார மூர்த்திகளும் எழுந்தருளியுள்ளனர். தென்புறத்தில் மேல் தளத்திற்குப் போகப் படிகள் உள்ளன. அவற்றில் ஏறி மேல் தளத்திற்குச் சென்றதும் முதலில் நாம் அடைவது 'கோபால விலாசம்'. அதனை அடுத்து விமல ஆகிருதி விமானத்தின் கீழே உள்ள



ஸ்ரீ பள்ளிகொண்டபெருமாள் சுவாமி—சந்நிதி வளாகம், S.V.K.S. ஸ்ரீவில்லிபுத்தூர், திருப்பதி.

கருவறையில வடஆலமரத்தின் கீழ் அனந்தாழ்வான மீது பெரிய பிராட்டியாரும பூமிபபிராட்டியாரும் அடிவருட ஆலிலேபபளளியான கிடந்த கோலத்தில் சேவை சாதிக்கின்ருர் அவரைச் சேவிக்கினறோம. அருணன், பிருகு முனிவர், மார்க்கணடேயர் ஆகியோர் அவர் அருகில் இருப்பதை யும் காணகின்றோம். இங்குளள ஆத்த மணடபத்தில் திருவாழி ஆழ் வான், கணணன், வீதியாளவருவார், வில்லிபுத்தூர வருவார, அலலல தவிர்த்த பிரான ஆகியோர் உறசவா களாகி எழுந்தருளியுளளனா. வட பத்திரசாயியின சநநிதியே ஆதிக் கோயில் என்றும், ஆணடாள சந்நிதி பினனர் எழுந்தது எனறும் அறி கின்றோம் இநத எமபெருமானிடம் விடைபெறுங்கால் திவ்வியகவியின் பாசுரம் நம மனத்தில் குமிழியிடத் தொடங்குகினறது.

''குறிததொருவர் கொண்டாடும

கொளகைததோ கோதை

நிறத்தவூர் விண்டுசிததர் நீடோ—

பிறபபிலியூர்

தாழ்வில்லி புத்தூரென்

றைவர்க்குத் தானிரந்தான

வாலவிலலி புத்தூா வளம''

(நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி-48)

[குறித்து-நினைதது. கொணடாடும்-பாராட்டும்; கொளகைதநோ-தன்மை யுடையதோ; நிறதத-மேமபாடு பெற்ற, பிறப்பிலி-கணணன: ஐவா-பாணடவர்கள]

என்ற பாசுரததை வாய்விட்டுப் பாடிககொணடு விடைபெற்றுத் திருமபுகின்றோம.

இநதத் திவவிய தேசததைப் பெரி யாழவாரும் ஆணடாளுமே மங்களா சாசனம செயதுளளனா. இவாகள் பல திருமொழிகளே அருளிச செய் திருநதாலும இநத ஊரைப்பறறிப் பாடிய பாசுரஙகள இரணடேதாம். கண்ணனுகிய குழந்தையைத் தாய்ப் பால் உணண தாய நிலையிலிருநது அழைக்கும் பெரியாழ்வாா,

''மின் அனைய நுண் இடையாா

விரிகுழல மேல் நுழைநதவண்டு

இனனிசைககும விலலிபுத்தூா

இனிது அமர்நதாய்! உனனைக

கண்டாா

என்னை நோனபு நோவு முள

கொலோ

இவனைப் பெறற வயிறுடையாள்

எனனும் வாா்ததை எயதுவிதத

இருடிகேசா! முலை உணவே''

(பெரியாழ்வார். திரு. 2.2:6.)

என்று பாடினா. அவருடைய [illegible] காதல் நிலையி[illegible]ந்து கொணடு [illegible]

''மெனனடை அனனம பரநது

விளையாடும்

வில்லிபு[illegible]

பொனனடி [illegible]

என

[illegible]

[illegible]

[illegible]

உனனொடு தோழமை கொளளுவன்

குயிலே!

உலகளந்தான வரக கூவாய்''

(நாச். திரு. 5;5)

[பரந்து-எஙகும பரவி; கண இணை-இரண்டு கணகள்; இன் அடிசில்-கனனல் அமுது; கோலம்-அழகிய]

என்பது பாசுரம. இந்த இரண்டு பாசுரஙகளிலும வில்லிபுத்தூரின் இயற்கைச் சூழநிலை காட்டப்பெற் றுள்ளது. இந்த இருவரைத் தவிர ஏனைய ஆழவார்கள் விலலிபுத்தூர் எம்பெருமானைப்பற்றி மஙகளா. சாசனம் செய்ததாக அறியக்கூட வில்லை.

ஆலிலைப் பள்ளியானைச் சேவித்த பிறகு கோபால விலாசத்தில் ஓரிடத் தில அமர்நது இத்திவ்விய தேசத்தைப் பறறிய சில செய்திகளை கோயில் அலு வலர் ஒருவர் மூலம் அறிந்து கொள் கின்றோம். ஆண்டாள் திருக்கோயிலில் ஆடிப்பூர உற்சவம் பெரிய திருவிழா வாக ஆண்டுதோறும் நடைபெற்று வருகின்றது. அந்த விழா நடை பெறும் பொழுது பெரிய தேரோட்ட மும் நடைபெறுகின்றது. பங்குனி மாதம் நடைபெறும் திருக்கல்யாண உற்சவமும் மிகவும சிறப்புடையதே.

பெரியாழ்வாரும் அவர் அருமைத் திருமகளாரும் கி. பி எட்டாம் நூற்றுண்டில் வாழ்ந்தவர்களாக ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர் ஆண்டாள்

---

சூர்ய சந்திர நடன தங்க பல்லி
காஞ்சி
எஸ். வி. கே. எஸ். ஸ்ரீநிவாசன்,
திருப்பதி



கோயிலின் கருவறை, அர்த்த மண்டபம், மகாமண்டபம் முதலியவற்றைச் சுந்தரத் தோளுடைய மாவலிவாணதிராயர் கட்டியதாகத் திருக்கோயிலின் தெற்குச் சுவரிலுள்ள கல்வெட்டொன்றால் அறிகின்றோம். சுந்தரத் தோள் நல்லூர் என்ற சொக்கனேந்தல் கிராமத்தை இந்த ராயரே ஆண்டாள் நாச்சியாருக்கு மான்யமாக விட்டிருக்கின்றார். வடபத்திரசாயியின் கோயிலை ஜடாவர்மன் என்ற திரிபுவன சக்கரவர்த்தி கோனேரின்மை கொண்டான் குலசேகர தேவர் என்பவரால் கட்டப்பட்டதாகும். பாண்டிய மன்னர்கள் இரண்டு கோயில்களையும் கண்காணித்து வந்தனர் என்ற செய்தியையும் அறிகின்றனர்.

இராமாநுசருக்கும் இந்தக் கோயிலுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. இராமாநுசர் இத்தலத்திற்கு எழுந்தருளியபோது நூறு தடா அக்கார அடிசிலை மாலிருஞ்சோலை மணளருக்குப் படைத்து, தன் அண்ணா வருகின்றார் என்று தன் அர்ச்சாவதாரச் சமாதி கடந்து ஏழடி முன் நடந்து எதிர் கொண்டு அழைத்த செய்தியையும் அறிகின்றோம், அதுமுதல் இராமாநுசருக்குக் 'கோயில் அண்ணன்' என்ற பெயரும் நிலைத்து விடுகின்றது. கம்பர் பெருமான் இத்தலத்திற்கு வந்ததாகவும் அவர் ஆண்டாளுக்குச் 'சூடகம்' என்ற தலையணியை வழங்கியதாகவும் செவிவழிச் செய்தியால் அறிகின்றோம். ஆண்டாள் கோயிலில் சுக்கிரவாரக் குறட்டில் ஒரு கம்பத்தில் இருக்கும் நாயக்கரின் சிலை இதனை அரண் செய்கின்றது.

சூடிக்கொடுத்த சுடர்க் கொடியையும் பெரியாழ்வாரையும் பற்றிப் பின் வந்தோர் பன்னூறு பாடல்களைப் பாடியுள்ளனர். திருமலையாண்டான் ஆண்டாள் பற்றி அருளிய தனியனை மேலே கண்டோம். மணவாளமாமுனிகள் இப்பிராட்டியைப் பற்றி அருளிய பாடல் புகழ்பெற்றது

''அஞ்சு குடிக்கொரு சந்ததியாய்
ஆழ்வார்கள்
தஞ்செயலை விஞ்சிநிற்கும் தன்மையளாய்ப்-பிஞ்சாய்ப்
பழுத்தாளை ஆண்டாளைப் பத்தியுடன்
நாளும்
வழுத்தாய் மனமே மகிழ்ந்து''

(உபதேச ரத்தினமாலை)

என்ற பாசுரத்தை அறியாத வைணவர்களே இரார்.

இங்ஙனம் ஆண்டாள் அருமை பேசும் பாடல்களைச் சிந்தித்த வண்ணம் திருக்கோயிலைவிட்டு வெளிவருகின்றோம். பேருந்து நிலையத்திற்கு வந்து திருத்தண்கால் செல்லும் பேருந்தில் ஏறுகின்றோம். பேருந்து கிளம்பிச் செல்லுங்கால வில்லிபுத்தூரின் பெருமையைக் கூறும்,

''கோதை பிறந்த ஊர்; கோவிந்தன்
வாழும் ஊர்
சோதி மணிமாடம் தோன்றும்
ஊர்—நீதியால்
நல்ல பத்தர் வாழும் ஊர்; நான்
மறைகள் ஓதும் ஊர்,
வில்லிபுத்தூர் வேதக்கோன் ஊர்''

(தனிப்பாடல்)

என்ற பாடல் மிடற்றொலியாக எழுகின்றது.



# இறைவனுக்கும் உயிர்க்கும் உள்ள இணக்கம்

'ஒழிவில காலமெல்லாம் உடனாய மன்னி
வழுவிலா அடிமை செய்ய வேண்டு நாம்'

உலகத்துச் சமயங்களும் தத்துவ நெறிகளும் பலவாகப் பெருகி இருக்கின்றன. அதற்குரிய காரணம் அவை வெளியிடும் உண்மைப் பொருள்களின் எண்ணிக்கை; அவை தம்முள் உள்ள தொடர்பு; உயிர்கள் இறுதியில் பெறும் பேற்றின் இயல்பு—இவை பற்றிய கருத்து வேறுபாடுகளேயாம். இறைவனுக்குச் செய்து கொண்டே அவனருகு இருக்க வேண்டும் என்பதே உயிர்கள் விரும்பும் அடைதற்கரிய பேறு. நம்மாழ்வார் அதனையே விரும்புகின்றார். அதுமட்டுமல்ல. வழுவிலா அடிமை செய்ய வேண்டும்; ஒழுவில் காலமெல்லாம் செய்ய வேண்டும் என்பதே அவர்தம் வேட்கை; வேணவா. காரணம் அதுவே ஜீவனின - உயிரின் இயல்புக்கு - சொரூபத்திற்கு ஏற்றது என்பதேயாம்.



ஸ்ரீ போக மூர்த்தி, ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமி கோயில்-திருப்பதி.
S. V. K. S. ஸ்ரீநிவாசன்-திருப்பதி.

பகவத் ஸ்ரீராமாநுசர் சுடர்மிகு சுருதிகளையும் ஆழ்வார் அருளிச் செயல்களையும் துணைக்கொண்டு நிலைநாட்டிய தத்துவத்தின சிறப்புக்களில் ஒன்று அவர் இறைவனுக்கும் உயிர்களுக்கும் இருக்கும் தொடர்புபற்றிக் கூறியுள்ள விளக்கமேயாகும். அத்தொடர்பினை ஒன்பது வகைப்படுத்திக் கூறுவர். அதனைப் பிள்ளைலோகாசாரியர் தம் 'நவவித சம்பந்தம்' என்ற நூலில் காணலாம். அவற்றுள் சேஷ சேஷி சம்பந்தம் என்ற உறவு முறைபற்றி ஆழ்வார்களும் கூறியுள்ள செய்திகளை விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கம்.

முன்னோர்களான சமய அறிஞர்களும், இறைவனால் மதிநலம் அருளப் பெற்ற ஆழ்வார்களும் கூறிய கருத்துக்களை விளங்கிக் கொள்வதே நாம் மேற்கொள்ளும் முயற்சி. அவை பொருந்துமா? என்ற ஆராய்ச்சிக்கு இங்கு இடமின்று. நூற்பிரமாணத்தின் வழி நின்று அவை தரும் மெய்ம்மைக் கருத்துக்களை உள்ளவாறு உணர்ந்து கொள்ளல் பயனுடைய செயலன்றோ?

அடிமை செய்ய வேண்டும்; பயன் கருதாத தொண்டு-கைங்கர்யம்-

அவ்வாறாயின் உயிரின் சொரூபம் யாது? என்ற கேள்வி எழுகின்றது. மிக்க இறையின் இயல்பும், மெய்யாம் உயிரின் இயல்பும் அறிந்து கொண்டால் அவ்விரண்டிற்குமுள்ள தொடர்பை - சம்பந்தத்தை நாம் உணர்தல் எளிதாம.

உயிரின் இயல்பு :

நிலைத்தஉண்மைப் பொருள்களான மூன்று தத்துவங்களில் ஆன்மாவும் ஒன்று. அது ஞானத்தையும் ஆனந்தத்தையும் இலக்கணமாக உடையது. அணு அளவினது. இவ்வகையில் ஆன்மா இறைவனோடு ஒத்ததாகின்றது. இவ்விரண்டும் ஆன்மாவை அசத்தினின்றும் வேறுபடுத்துகின்றன. தாஸ்யம் அல்லது சேஷத்துவம் ஆன்மாவின் இயல்பு. இவ்வியல்பு ஆன்மாவினை இறைவனினின்றும் வேறுபடுத்துகின்றது. ஆக, சேஷத்துவத்தோடு கூடின ஞானத்தன்மையும் ஆனந்தத் தன்மையுமே ஆன்மாவிற்கு இலக்கணமாம். இறைவனுக்கு ஆன்மா உடலாகின்றது. அதனால் அது சேஷமாகின்றது. அவ்வியல்பாலேயே அது உளதாம் தன்மையைப் பெறுகின்றது. உளதாம் தன்மையைப் பெற்ற

பின்னரன்றே அதன் நிருபகம் அதாவது ஒரு பொருளை மற்றொரு பொருளின்று வேறுபடுத்திக் காட்டும் சிறப்பியல் பற்றிய ஆராய்ச்சி. ஆன்மா ஒரு மலர் என்றால் அதன் புறவிதழ் போன்றது ஞானத்தன்மையும் ஆனந்தத் தன்மையும். இறைவனுக்கு உடலாம் தன்மையால் வந்த சேஷத்வமே அதன் சிறப்பியல்பு (அந்தரங்க நிருபகம்).

இறையின் இயல்பு :

சேஷம் என்பது அடிமைத் தன்மை. அதாவது சந்தனம், மலர், வெற்றிலைப் பாக்கு முதலியன போன்று இறைவன் தன் விருப்பப்படி பயன்படுத்திக்

டாக்டர். கு. தாமோதரன்,
திருப்பதி-2.

கொள்வதற்கு ஏற்றதாயிருப்பது என்பது அதன் பொருளாம். இதுவே ஆத்மாவின் இயல்பு என்பது எங்கே கண்டோம் எனில் திருவாய்மொழி இதனை அறிவுறுத்தும்.

திருவேங்கடம் பற்றிய (6-10) திருவாய்மொழியில் நம்மாழ்வார் தான் சரணமடைதலைக் கூறுகையில்,



தேவியருடன் ஸ்ரீ சுந்தரராஜ சுவாமி-
ஸ்ரீ பத்மாவதித தாயாா தெப்போற்சவம்-திருச்சானூர்.

அடிமைத்தன்மை என்பது விரும்பி ஏற்றுக்கொள்ளத் தக்கது அன்று. அது துன்பமாகவன்றே இருக்கும. உரிமையையன்றே யாவரும் விரும்புவர். இவ்வடிமைத் தன்மை ஆன்மாவுக்குத் துயரமன்றே விளைக்கும் எனின், அன்று. உலகியல் முறையில் பாடுகையில புதுமைக்கவி சுப்பிரமணிய பாரதியார் கூட,

'பூமியில எவாக்கு மினி அடிமை
செய்யோம-பரி
பூரணனுககே அடிமை செயது
வாழவோம்'

என்று பாடுவது காணலாம். உலகத்துத் தலைவர்க்கும் இறைவனுக்கும் நிறைந்த வேறுபாடு உண்டு. அவ் வேறுபாட்டை அறிந்தால் ஆன்மாவின் அடிமைத் தன்மையாக இருக்குமஇயல்பு அதன் துன்பத்திற்கு ஏதுவாகாது என்பது புலப்படும். எல்லோர்க்கும் தலைவனுன இறைவன் காப்பவன்; ஆன்மாதான் தனக்கு நாசகன் என்பது பரக்க நூல்களில் பேசப்பட்டுள்ளது.

இறைவன் ஒருவனே. சேஷி-தலைவன். மற்ற எல்லா உயிர்களும் சேஷங்கள்-அவன் அடிமைகளே. ஆதியான சேஷன் ஒருவன் இறைவன் அருகிலேயே உளன். அவனே ஆதிசேஷன்: இறைவன் அருகிலேயே இருந்து எல்லா அடிமைகளையும் செய்யுமஅடிமைத் தன்மைகளை,

'சென்றல் குடையாம் இருந்தால்
சிங்காதனமாம
நின்றல மரவடியாம நீள்கடலுள்-
புணையாம் மணி விளக்காம
பூம்பட்டாம, புலகும்
அணையாம் திருமாற்கு அரவு'.
(மு. தி. 53)

என்று ஆழ்வார் அழகுறப்பாடுதல் காணக. நித்தியர், முத்தர், பத்தர், என்ற மூவகை ஆன்மாக்களும் இறைவனின் அடிமைகளே.

இந்த அடிமைத்தன்மை இறைவன் ஒருவனுக்கேயாக இருக்க வேண்டும்.

'குலதொல்லடியேன உன் பாதம் கூடுமாறு கூருயே' என்று தொடங்கி 'புகவொன்றில்லா அடியேன் உன் அடிக்கீழ் அமர்நது புகுந்தேனே' என்பது இறுதியாகப் பல காலும் திரும்பத் திரும்பத் தனனை அடியவன் என்றும், தான இறைவன் அடி அடைய வேண்டுமென்றும பாடிச் சரண் அடைகின்றுர். ஆனல் 'கண்கள் சிவந்து' என்ற திருவாய்மொழியில் (8.8.2) இறைவனைப் பற்றிப் பாடுகையில் 'அடியேன் உள்ளான் உடல் உள்ளான் அண்டகத்தான் புறத்துள்ளான்' என்று பாடுகின்றுா. இங்கு உயிரின் உள்ளான் எனபதனையே அடியேன உளளான என்கினருா. இதனல உயிரின் இயல்பு இறைவனுக்கு அடியவனுக இருப்பதே என பதை நமமாழ்வார் குறிப்பிடுகின்றுர் என்பதனை ஐயமற அறியலாம. இங்கு இப்பொருளையே, ஆழ்வான் திருக்கோட்டியூர் நம்பி பக்கல் ஆறு மாதங்கள் சேவித்து நின்று மாநிதியாகப் பெற்றுர் என்ற வரலாறும் நாம் அறியத்தக்கதாகும்.

வகுத்த விஷயத்திலேயேயாக இருக்க வேண்டும். 'கண்ணபுரமொன்றுடையானுக்கு அடியேன் மற்று ஒருவர்க்கு உரியேனே' (8.9.3) என்று திருமங்கை மன்னர் பாடுவர். "ஒண்தாமரையாள் கேள்வன் ஒருவனையே நோக்கும் உணர்வு" (மு. தி. 67) என்று வரும் பொய்கையாழ்வார் பாடலும் காண்க. இங்கு உணர்வு என்பது அறிவினை மட்டுமன்று; அறிவாகவே இருக்கும் ஆன்மாவினைக் குறிக்கின்றது. 'அவர்க்கே நாம் ஆட் செய்வோம்' (29) என்று திருப்பாவையும் உணர்த்துகின்றது.

இவ்வடிமைத் தன்மை ஆன்மாவிற்கு, நடுவில் வந்ததன்று. இயல்பாகவே அநாதியாகவே உள்ளது. 'திருமாலே நானு முனக்குப் பழவடியேன்' என்று பெரியாழ்வார் திருப்பல்லாண்டில் கூறுவது கொண்டு இதனை அறியலாம். 'நான் எனக்கு உரியன்' என்னும் அகங்காரமும், இறைவனை அன்றிப் பிறர்க்கு அடிமைப்படுதலும் ஆன்மாவுக்கு வந்தேறிகள். இவை சேஷத்வத்தின் விரோதிகள். இவ்வெண்ணங்களை வேரோடு துடைத்தல் வேண்டும். அகங்காரம் இறைவனை இழப்பதற்கும், அகங்காரமின்மை அவனைப் பெறுதற்கும் காரணமாகையால் குலசேகரப் பெருமாள் முதலியவர்கள் அகங்காரத்திற்குக் காரணமான பிறப்புக்களை விரும்பாமல் பிற பிறப்புக்களை விரும்பினார்கள். 'திருவேங்கடத்துச் சுனையில் ஒரு மீனாய்ப் பிறக்கும் விதியுடையேன் ஆவேனே' என்றும், அவனை அநுபவிப்பதற்கு ஏற்ப அவன் திருமலையில் ஏதேனும் ஆவேனே என்றும் பாடுவது காணலாம். அதற்கும் ஒரு படி மேலே சென்று 'படியாய்க் கிடந்து உன் பவளவாய் காண்பனே' என்றும் பாடுகின்றார். இறைவனை எண்ணி அவன்பால் ஈடுபடுகையிலும் அவன் குணங்களைக் கண்டு அன்று; அவனே இவ்வான்மாவிற்கு வகுத்த தலைவன் என்ற எண்ணத்துடன் செய்தல் வேண்டும். இதுவே மயர்வற மதிநலம் அருளப் பெற்ற ஆழ்வார்கள் அருளிச் செய்துள்ள செய்தி.

தன் காரியத்தில் நோக்குள்ளவன், பிறர் நோவறியாதவன், ஒருவருக்கும் எட்டாதவன், என்னை வஞ்சித்தவன், அறிதற்கரிய தன்மையன் என்பன அவன் இயல்பாயினும், என் நெஞ்சு அவனையே எண்ணிக் கொண்டிருக்கின்றது என்கிறார், தலைவி நிலையில் பேசும் நம்மாழ்வார்.

'கடியன் கொடியன் நெடியமால்
உலகம் கொண்ட
அடியன் அறிவருமேனி மாயத்தன்
ஆகிலும்
கொடிய என் நெஞ்சம் அவன்
என்றே கிடக்கும். (5.3.5)

என்று பாடுவது காண்க.

திருமங்கை ஆழ்வார் இறைவனைக் 'கடல் மல்லைக்கிடந்த கரும்பே' (7-1-4) என்று விளிக்கின்றார். அவர் வேறு இடத்தில் பாடுகையில், 'வேம்புக்கு இட்டுப் பிறந்த புழு அந்த வேம்பினையே உண்ணுமதொழியக் கரும்பைக் கண்டாலும் விரும்பாது. அப்படியே எல்லையில்லாத இனிமை உடையவனான நீ வேம்பு போலே இனியன் அல்லாத காலத்தும் உனக்கே அடியவனான நான் உன் சேவடியின்றி நயவேன்' (11-8-7) என்று அருளிச் செய்வதும் காணலாம்.

இறைவனுடைய குணங்களுக்குத் தோற்று அடிமையாக இருந்து தொண்டு புரிதலும் உண்டு; சேஷத்வத்தாலே தான் தன் இயல்பைப் பார்த்துத் தான் செய்யும் தொண்டும் உண்டு. பின்னது காரணம் பற்றாமல் வருவதால் அதுவே முதன்மையானது என்பதாம். மற்றும் கைங்கரியமானது 1. தலைவனது முக மலர்ச்சிக்கு உறுப்பானவற்றையே செய்துகொண்டு நிற்க வேண்டுமபடியான அவன் திறத்தில் உள்ளதாகும் அன்பு காரணமாக வர வேண்டும். அல்லது 2. கைங்கரியம் இல்லாதபோது அடிமைத்தன்மைக்கு அழிவு வரும் என்னும் அச்சம் காரணமாக வரவேண்டும். இவ்விரண்டனுள் முன்னதுவே சிறந்தது. கைங்கரியம் பயன் கருதிச் செய்யப்பெறுவது அன்று; இறைவன்பால் கொண்ட பேரன்பே அதற்குக் காரணமாகல் வேண்டும்: "நான் இன்னது கொடுக்கிறேன். நீ எனக்கு இது தருக" என்ற முறையில் ஈடுபாடு கொள்வது பொருந்தாது. அது அடிமைத் தன்மைக்குச் சேராது. அத்தன்மையை விளக்கும் நிகழ்ச்சியை ஆண்டாள்பால் நாம் பார்க்கலாம். திருமாலிருஞ்சோலை நம்பிக்கு நூறு தடா நிறைய வெண்ணையும் அக்கார அடிசிலும் செய்வதாகக் கூறி,

'இன்று வந்து இத்தனையும் அமுது
செய்திடப் பெறில் நான்
ஒன்று நூறுயிரமாகக் கொடுத்துப்
பின்னும் ஆளும் செய்வன்'
(நாச்சி 9-6)

என்று பாடுகிறார் அவர். அதுபோல அவன் கொடுத்தப் பொருளை அவன் ஏற்றுக் கொண்டதற்கு நன்றியாக அப்பொருளைத் தன் ஆசைக்குத் தகுதியாக நிறையக் கொண்டு வந்து கொடுத்துப் பின் அடிமை செய்கையாகிற கைக்கூலியும் கொடுக்க வேண்டுமென்பதாம்.

தன்னை அவனுக்குக் கொடுத்தலும் கைம்மாறு ஆகாது. ஏனெனில் தானே அவன் உடைமை அன்றோ. "அந்நாள் நீ தந்த ஆக்கை" என்பது திருவாய்மொழி. அவன் சொத்து இது என்று கொடுத்தல் நன்றும் அல்லது தன்னுடைமை என்று நினைப்பின் இவனது கனவு வெளிப்பட்டு விடுமாம். இதனை நயமுற விளக்கும் பாடலைக் காண்க.

'பண்டேயுன் தொண்டாம் பழ உயிரை
என்ன தென்று
கொண்டேனைக் கள்வனென்று
கூறுதே மண் தலத்தில்
புள்வாய் பிளந்த புயலே! உனைக்
கச்சி
கள்வாவென றேதுவதென் கண்டு.
(108 திருப்பதி அந்தாதி)



ஸ்ரீபிரமமா, விஷ்ணு, மகேஸ்வரர்-
நாகலாபுரம.

S. V. K. S. ஸ்ரீநிவாசன்-திருபபதி

இவ்வானமா அசித்து அன்மையால் இறைவன் செய்த உபகாரஙகளை நினைந்திருத்தலும், உகந்து பணி செய்தலும் இரண்டும் இவன செயய வேண்டுவன. ஆனுல் அவை இறைவன் இவனை ஏற்றுக் கோடற்கு உபாய மாகா. அவன் தலைவனுகையால் (சேஷி) இவனுடைய செயல்களில் ஒன்றையும் விரும்பாதபடி அவன் இருக்கிறுன். இவனைப் பாதுகாத்தல் தன் பேறு என அவன எணணுகிறுன். அருள் செய்வார்க்கு வறிதே அருள் செய்தலே அவன் காரணமற்ற கிருபை யின் இயல்பாகும். இவனுல் வரும் நன்மை விலைப்பால் போல என்றும், அவ்விறைவனுல் வரும் நன்மை முலைப் பால் போல எனறும் திருக்குருகைப் பிரான் கூறுவர்.

அவன் கிருபை ஒன்றே உபாய மாவது. அதனை விலக்காது இசைவது ஒன்றே இவன் செய்யக்கூடிய செயல். முற்றறிவினனுய், எலலா ஆற்றல களையுமுடையவனுய், அருட்கடல் அம்மானுய் இருக்கின்றவனுடைய 'அவன் உய்வு பெறுவதற்கு நிமித்த மான நினைவே' உபாயம். ஆன்மா விற்குத்தான் தன்னைப் பாதுகாத்துக் கொள்ள முடியும் என்ற எண்ணம் மாறினுல் அவனது அருள் கிட்டும்.

இவவாறு அவனுக்கு அடிமைப்பட்டிருத்தல் முதல் நிலை ஆகும். இதன் முடிந்த நிலை அவன் அடியார்க்கு அடிமைப்பட்டிருத்தலாகும். இதனையே திருமங்கை ஆழ்வார் 'உற்றதும் உன்னடியார்க்கு அடிமை' (8.10.3) என்று பாடுவர். முன் ஆன்மாவாய மலர்க்கு ஞானமும் ஆனந்தமும் புற விதழ் என்னும்படி பகவானுக்கு அடிமைப்பட்டிருக்கும் தன்மையே வடிவு எனப்பெற்றது; அதனுடைய உண்மை நிலையை ஆராயின் பகவானுக்கு அடிமைப்பட்டிருக்கும் தன்மை புறவிதழ் என்னும்படி அவனடியார்க்கு அடிமைப்பட்டிருக்கும் தன்மையே வடிவாய் இருக்கும் எனன வேண்டும். அதே முறையில் பலனை நினைததால இறைவனுக்குச் செயயும் தொண்டு முதற்படியாயும் அவன் அடியாரக்குச் செய்யும் தொணடு முடிநத நிலமாகவும் இருக்கும் என்பதும் அறிதல் தகும்.

இன்னும் வேறெரு வகையில் பார்க்கையில் ஆன்மாவின உண்மை நிலையை அறிந்தவர்கள் பகவானுக்கு அடிமைப் பட்டிருக்கும சேஷத்தன்மையும், போகதசையிலே விளைகின்ற சுவையை அநுபவிப்பவன் ஆகின்ற போகருத்வமும் முதல்படி என்றும; தலைவனுக்கு விருப்பமான வகையில் அவன் பயன் கொள்ளுகின்ற பாரதந்தரியமும் (அவன் உடமையாதலும்) எம் பெருமானுக்கே யோகயமாம்படி இருப்பதாகிய யோக்யதையும் மேலான நிலை எனவும்; இவ்வாறு அறிபவர் பிரபன்னர் என்றும விளக்கப்பெறுவதும் உணடு.

சேஷதவத்தையும் போகருத்வத்தையும் உணர்பவர்கள் பக்தி நெறியில் ஈடுபடலாம. அதில் குற்றங்கள ஏற்பட இடமுணடு. பாரதநதரியத்தையும் போக்யத்தையும் ஆன்மாவின் இயல்பென உணர்பவர்கள் பிரபத்தியில் ஈடுபடுவர். அவர்களும் பிரபத்தியை உபாயமெனக் கொளீளின் அது குற்றமாம். ஆன்மா இறைவனைப் பறற முயல்வதினும் இறைவன் ஆன்மாவைப் பற்ற முயலும். அதுவே வலிமையுடையது; சிறப்புடையது. ஸ்ரீவசன பூஷணத்தில் பக்தியில் ஈடுபடச்சக்தியற்றவனுக்கு பிரபத்தி; பிரபத்தியில் செல்லும் சக்தியற்றவனுக்கு ஆசாரிய அபிமானமாகிற ஒரு கடைசி உபாயம குறிக்கப்பெறுகின்றது. அடியார்களுள தன்னை ஏற்றுக் கொண்டு தனககு உண்மை ஞானத்தை அளித்த பெரும் உபகாரனை ஆசாரியனுக்கு அடிமையாக இருத்தல் எல்லை நிலம் எனபதாம். அவன் திருவடிக்குக் கைங்கரியம் பண்ணுதல் பலனில் முடிந்த நிலை என்றும் கொள்ளப்பெறும்.

### ஆசாரிய அபிமானம !

இது பிரணவத்தால் தெரிவிக்கப்படுகினற அநந்யார்ஹ சேஷத்வத்தை-அவனுக்கே அடிமையாகின்ற இயல்பைத்—தளிர்விடச செய்யும். அது பின்பு நடுவான நமப்பதத்தால் தெரிவிக்கப்படுகின்ற அநந்ய அர்ஹதவ ஞானத்தை—அவன் ஒருவனையே உபாயமாகக் கொண்டிருத்தலாகிய ஞானத்தை மலரச் செய்யும். அடுத்து மூன்றுவதான நாராயண பதத்தால் தெரிவிக்கப்படுகின்ற அநந்ய போகத்வ ஞானத்தை—அவனையே இன்பமாகக் கொண்டு உய்தலாகிய தன்மையை-உணர்த்தி நிலையான கைங்கரியத்தில் கொண்டுபோய் மூட்டும். அதுவே **பழம்** என்று காட்டுவா அறிஞர் பெருமககள்.

இவ்வாறுக வைணவ மத-தத்துவம் உலகததுககு அப்பாற்பட்டுப் பரம பததிலேயே நிற்பதாக அல்லாமல் உலகில வாழும வகையை நன்கு அறிவுறுத்துவதாய் பக்தி-பிரபத்திகளை வலியுறுத்தி அடியார் கூட்டத்தைப பெருக்கி ஆசாரிய அபிமானத்தை வற்புறுத்தி மனித இனத்தை உயர்வுடையதாக்கிக் கைங்கரிய நிலைக்குக் கனிவிக்கும் இயல்புடையதாக விளங்கும் திறம் அறிந்து மகிழற்பாலதாம். 

இவ்வருள் தேவி நமக்கு எவ்வாறெல்லாம் உதவி, நம் மனத்தைப் பண்படுத்தி, இறைவன் சீற்றத்தையும் போக்கி நமக்கு இஹபரங்களை ஸாதித்துத் தருகிருள் என்பனவறறை சுமார் எண்பது ஸ்லோகங்களில் கண்டு மகிழ்ந்தோம்.

இனி ஒரு பதிகத்தில் எட்டாப் பொருளாகிய அப்பரம் பொருளை எப்படி நம்முடன் வந்து கலக்கும்படி செய்கின்ருள் இத்தயா தேவி என்பதைக் காண்போம்.

''ஏக மேவ அக்ர ஆஸீத்'' முதல் முதல் ஒன்றுதான் இருந்தது. ''ஏ கணடு அவைகள் செயல்பட்டு முன்னேறவே இப்பிரபஞ்ச சிருஷ்டி என்று முன் ஒரு ஸ்லோகத்தில் பேசினன் கவி. ''அசித் அவிசிஷ்டான் ப்ரளயே ஜந்துரன் அவலோக்ய ஜாத நிர்வேதா .. கருண களேபர யோகம் விதரஸி'' என்று.

இப்படி எல்லா ப்ரபஞ்சங்களும தோன்றி இயங்கக காரணமாயுள்ள அவன் பிரபஞ்சங்களில் காணும் அல்லல்களையும் அமைதியையும சகிப்பானே? கேவலம் அன்பு காரணமாக, தயா தேவியின் காரணமாக சருஷ்டிகளில் ஒனருகி, ஒரு மீனகவோ ஆமையாகவோ, சிங்கமாகவோ, குறை



# திருவேங்கடவனின் திருவருள் தேவி

திரு. எஸ். வி. ராமசுவாமி,
செகந்திராபாத்

ஈக்ஷத'' அது நினைத்தது நான் பலவாக ஆவேன் என்று. படிப்படியாக நாம் காணும் ப்ரபஞ்சமும் காண முடியாத எண்ணற்ற ப்ரபஞ்சங்களும் தோன்றின. தானே அவைகளின் உள்ளும் புறமும் நிறைந்து அவைகளின் ஸ்வரூப ஸ்த்திதி ப்ரவ்ருத்திகளை இயக்குவிக்கலானன்.

இது மறைகளின் பேச்சு. அது ஏன் அப்படி நினைக்க வேண்டும்? ஈணடு பிறக்கின்ருள் தயா தேவி.

ஆன்மாக்களும் ஈச்வரனைப் போன்றவையே. ஆனல் ப்ரபஞ்ச ஸம்பந்தத்தால் ஆனதி கர்மவாஸன ருசிகளினலே மறுபடி மறுபடி பிறந்தும் இறந்தும் உழல்கின்றன. இதுவும மறைகளின் துணிபு.

இப்படி உழலுமதன் போன்ற ஆன்மாக்களுக்கு அவைகளின் ஸ்வரூபத்தை உணர்த்தி அவைகளை இச்சுழலினின்று விடுவிக்க வேணடும் என்ற கருணையுள்ளம்தான் அந்நிர்க்குண நிராகார ப்ரும்மத்தையும் பிடிக்கும் தயா தேவி.

பிரளயத்தில் இவ்வான்மாக்கள் செயலிழந்து கிடக்கும் நிலையைக்

மனிதனகவோ வெளிப்படுவதே அவதாரங்களாகும்.

''நாட்டார் பிறந்துபடுமவை யெல்லாம் படாததற்காகத் தான் பிறந்து படாதன பட்டான்'' என்று அறிஞர் ராமாவதாரத்தைப் பேசுவர். அப்படியும் தன்னை அறிந்து கொள்ளாமல் உளரே மக்கள் என்று மனம் வெதும்பி '‘அவஜானந்திமாம் மூடா: மானுஷம் தனு மாச்ரிதம்'' என்று கிருஷ்ணவதாரத்தில் பேசுகிருன்.

எனவேதான் மக்களுக்கு நன்ருக புரியும்படியும், அருளும்படி திருவேங்கடமலை போன்ற திவ்ய க்ஷேத்திரங்களில் அர்ச்சையாகி (சிலையாகி) தன்னருளை வழங்குகின்ருன். எப்படி?

—''கருமேகங்கள் மக்கள் தாபத்தை தீர்க்க உயர நின்று ஹிதமான மழை பொழிவதுபோல்—

''க்ருஷ்ணமேக ஜநிதாம் ஜநிதபஹரான்'' என்று ராம கிருஷ்ணதி அவதாரங்களுக்கு முன், ஸ்ரீனிவாஸன் போன்ற அர்ச்சாவதாரங்களுக்கெல்லாம் திருவருள் தேவியே காரணம்'' என்று பேசும் இப்பதிகத்தின் முதல் ஸ்லோகம் கவனிக்கத்தக்கது.

“ஹே! தயா தேவியே உன் கடல் போன்ற மனத்தாலல்லவா இறைவன் திருவேங்கடம் போன்ற ப்ரதேசங்களில் ஸ்ரீநிவாஸன்போல் கோயில் கொண்டு இக்கலியில் மக்களது குறைகள் நீங்கும்படி அருள் மழை பொழிகின்றன்''

''க்ருபே விகதவேலயா க்ருத ஸமகர போஷைஸ்த்வயா
கலிஜ்வலந துாகதே ஜகதி காள மேகாயிதம்
வ்ருஷ க்ஷிதி தராதிஷு ஸ்திதி:
பதேஷு ஸாநுப்லவை:
வருஷாத்ரிபதி விக்ரஹைர்வயபக
தாகிலா வக்ரஹை:

இறைவன் திருவுள்ளத்தில் தான் படைத்து நிறைந்துள்ள ப்ரபஞ்சங்களின் நினைவு நிழலாடுகின்றது. ஏன்? தயா தேவி ஆங்கு தோன்றுகிருள். இப்படி இப்பிரபஞ்சத்தை தன் ஸத்ய ஸங்கல்பத்தால் இயக்குவதன்றி (ஸமீக்ஷண விசிந்தன) தன் கடாக்ஷத்தா



ஸ்ரீ ஆண்டாள—ஸ்ரீ கோவிந்தராஜசுவாமி கோயில, திருபபதி.

லும் நினைவிஞலும் நல்வழிப்படுததுவ தால் அவன் கருணை (தயா தேவி) த்ருப்தியடைவதில்லை பின! இத் தகைய விசிதரமாக கருணை புரியும் தன்மையுள்ள ஜநதுவர்க்கங்களாகவே அவனை அவதரிககவைதது அவன் உள்ளத்தில் நிறைநது சராசரங்களைக் காப்பாற்றுகின்ருய்.

மீன்கள் பலவகை. அவைகள குணங்களுமவிசித்ரமானவை ஆனுல அவ்வினத்தின் இயற்கை விசேஷம ஒன்றுள்ளது. தாமிட்ட முட்டையை ஓர் பார்வையால் குஞ்சாக்கி போஷித்துவிடுகின்றது.

ஆமைகள் தம் குட்டிகள் வளர வேண்டும் என நினைவாலேயே தம் மினத்தை வளர்ககின்றன.

அன்னங்கள் தம் குஞ்சுகளைத் தன் சிறகால் அணைப்பதால் அவை வளர்ந்து வளம் பெருகுகின்றன.

இவ்வினங்களாகவே அவனைப் பிறசகவைத்து அவன் கடாக்ஷத்தா லும், திருவுளளத்தாலும், அனைப் பாலுமல்லவோ பிரபஞ்சஙகளைப் போஷிககின்ருள் தயா தேவி.

என்னே அவள் விளையாட்டுக்கள்.

இககருதது 82வது ஸலோகத்தில் மிக அழகாகப் பேசப்படுகின்றது.

''பரஸீய விவிதம ஜகத் ததபி
வருததயே தவம தயே
ஸமீக்ஷண விசிந்தந ப்ரபருதிபி:
ஸவயம தாத்ருசைஃ
விசித்ர குண சிதரிதாம் விவித
தோஷ வைதேசிகீம்
வருஷாசல பதேஸ்தநும விசவி
மதஸ்ய கூர்மாதிகாம''

இப்படி எம்பிரான் ப்ரபஞசத்தை நலவழிப்படுத்தி துஷ்ட நிக்ரஹ ஸிஷ்ட பரிபாலனம செய்யும் கருணை யுள்ளத்தை வியந்து அவன் அவதாரச் சித்திரங்களாகத் திகழ்கின்றன இப் பதிகத்துள்ள ஏனைய ஸ்லோகங்கள்.

முறையே அவைகளைச் சொல்லி ஒன்றிரணடையாவது விவரித்து இப் பதிகததை முடிப்போம்.

ஹே! தயா தேவியே! பிரளயச் சாந்தியில் யோக நித்திரையில் அவன் ஆழ்ந்த போதும் நீ அவன் மனத்தை விட்டுப் பிரிவதில்லை. அப்பொழுது பூமிதேவியின அவலக்குரல் உன் காது களில் வீழ்கினறது. மறுகணமே அவன் மறைகின்ருன. சிநதனைக்கும் எட் டாத ஓர் மாபெரும் கோரவராஹம் ப்ரளயக கடலைக கிழித்து மேலெழு கினறது. (''மாசுடம்பில் மீர்வாரா மானமிலாப் பன்றி'' எனகின்ருள் ஆணடாள்) ஆதன் கோரைபபறகளில் இநத பூமி ஓர் சிறு மண திவலைபோல் காக்கபபடுகிருள். என்ன ஆச்சரியம்!

உன்னைப் பேசிய ஓர் அசுரக்குழந் தைக்கு அமுதப்பாலூட்ட நீ என்ன அட்டஹாஸம் செய்துவிட்டாய்.

பிடரி மயிர் சிலிர்த்தலால் படைப் பெல்லாம் கலங்குகின்றன. அதன் இடிச சிரிப்பு அண்டங்களைப் பிளக கினறது. மலையொத்த அதன கற்றைப் புருவங்கள் துடிகக அதன சிவந்த கண்கள கோபக்கனலைக கக்க ஒரு சிங்கமல்லவா உருவெடுத்தது.

கோபக்கனல எழும் அக்கண்களில் ஓர் தாமரைத் தோற்றம், உணாச்சி, ஏன். நீயல்லவா அஙகு நினறு, அவ வசுரச் சிறுவனை ப்ரஹலாதனை வாரி யெடுத்து அமுதப் பாலூட்டினுய.

''ஸபுரத்கருதி,பரிஸபுடதபருகுடிகேபி
வக்த்ரே கருதே
தயே வருஷகிரி சிதுஃ தநுர் ஜமப
ததத ஸதநா.''

என்று ஸ்லோகம் பேசுகின்றது.

அனறு திருவேங்கடவன மூவடி மண்ணினை மஹாபலியிடம் தான மாகக கேட்டான். ஏன? மூவுலகை யுமே கேட்டாலும மகாபலி அளித திருப்பானே!

பின்னர் ஒரு நாள் மஹாபலி தோனறி மறுபடியும் இவ்வுலகங்களை அபஹரிக்க முயன்ருல் என் செய்வ தென தயா தேவி சிந்தித்தாள். சரா சரம் யாவும் திருவேங்கடமுடையா னுடையதே என்று சாச்வதமான தஸ்தாவேஜு ஏற்படுத்த நினைத்து இத்தயா தேவி அவன் திருவடிகளிலும நிறைந்து அவன் திருவடிகளாகிய முத்திரையை ஏற்றத் தாழவில்லாது முத்திரையிட்டாள். இப்படி பாதா ளம், பூலோகம், மேலுலகம் யாவை யும் வைணவமயமாக்கினுய். இது திரி விக்ரமாவதாரம் என்று நீ இயககிய ஸாஹஸமே.

உலகம் தழைத்தோங்காமல அஹங காரம பிடித்த அரச கூட்டஙகளின பிடியில் சிககியது. இதனைக் கணட திருவேஙகடவன மஹானுன பரசு ராமன் உட்புகுந்து ஏழு தலைமுறை அவ்வஹங்கார அரசாகளை அழித்து ரத்தக் காடாககினுன். அவர்கள் உதிரக் குழம்பை குஙகுமக் குழம்பு போல் உன் மேல் பூசி 'எல்லாம் உன் நன்மைக்'கென்று சிரித்து விளையாடு கின்ருன்.

ஆம். தயா தேவியின் விளையாட்டு சுருக்குக் குறுக்கிடுகளைப் போககியதும நயையே எனபான போலும்.

''ஹே தயா தேவியே' திருவேஙகட முடையானை மட்டுமா நீ அவதரிக்க வைக்கிறாய். கூட லக்ஷ்மியையும அவ தரிக்கவைதது அவர்கள் உளளஙகளில நாராளமாக உலவுகின்றாய. இன றேல் ''யதிவாராவணஸ்வயம'' என்று ராவணனுக்கும் அபய முண்டு என்று ராமன் பேசுவானா? சீதையை. அப் பொழுது துன்புறுத்திக் கொண்டே இருந்த ராக்ஷஸிகளை ''ஐயோ பாவம் அறியாமல் செய்கின்றார்கள்'' ''அப ராதம் செய்யாதவர்கள் யாருளா?'' ''ந கஸ்சின் நாபராதயதி'' என்று அன்று பேசி அநுமனிடமிருந்து காப் பாற்றியதும், ஹே! தயையே உன் தூண்டுதலால்லவோ. வருமம எக் காலத்தும கணகளால் கணடாலே எல லாப் பாதகங்களையும் எல்லோர்க்கும் போக்கவல்ல 'ஸேது' என்ற அணை யையும கட்டுவித்தாய்''

''........................... த்வயா
வ்யபஜ்யத ஸரித்பதிஃ ஸக்ருத
வேக்ஷணாத தகக்ஷணாத
ப்ரக்ருஷ்ட பஹு பாதக பரசம
ஹேதுநா ஸேதுநா ''

பார்த்தமாத்திரத்தில் பெரும் பாத கங்களையும் போக்கவல்ல ஸேது, ஸமுத்திரத்திடையே உன்னாலல்லவோ ஏற்பட்டது' என்று கவி பேசும் அழகு காணத்தக்கது.

'தயா தேவியே, நீ ஸ்ரீநிவாஸனை பூ பாரம் போக்க அன்று அவதரிக்கத் தூண்டினாய். அதனை வ்யாஜமாகக் கொண்டு நீ என்ன செய்தாய் தெரியுமா?

உலகத்தில் எக்காலத்தும், எல்லாப் பண்டிதர்களாலும் ஒப்புக் கொள்ளப் பட்ட, அறிவுப் பொக்கிஷமான பகவத் கீதையை அவனைப் பேசும்படி செய்து உலக அஜ்ஞான இருளையகலவோ ஓட்ட மூட்டினாய்' அந்த கீதை யவைவ வேதங்கள் என்ற பரிமேளம் மாளிகையின நிபமாக சுடர்விடு கின்றது''

விரிவையஞ்சி இந்த ஸ்லோகத்தை இவ்வளவே விளககி மேல் செல் கின்றேன.

இமமட்டோ' குதிரை சவாரியில மிக வல்லவனான உன் ஸ்ரீநிவாஸனை ஓர் மின்னல் சூறுவளிபோல் இந்தக் கலியுக முடிவிலும காட்ட திட்ட மிட்டிருக்கிறாய்.

இப்படி ஸ்ரீநிவாஸனை அவதரிக்க வைத்து ஆட்டிப் படைக்கும் தயா தேவியின் விளையாட்டுகளை இதுவரை பேசி இறுதிப் பதிகத்தின் முதல் ஸ்லோகமாகிய 91ல் தானே அவளைச சரணபுகுகின்றார்

''இதுகாறும் கூறியபடி இந்த ஜகத் துககே பலப்படி உதவும வ்ருஷாத்ரி பதியினுடைய தயா தேவியே. இத் தகைய உன்னருள் என்றுமே சுரநது கொணடிருக்கின்றது. இதை உணர்ந் தும் நான் ஏனோ அடிககடி அதனை மறந்துவிடுகின்றேன். நானோ உன் தூண்டுதலாலேயே உன்னிடத்தி லேயே என் ரக்ஷணத்தை ஸமர்ப்பித்து நிறபவன். நீயேதான் எனனை ஸ்ரீநி வாஸனிடத்தில் ஸமர்ப்பிக்க வேண்டும்.''

என்று தெளிவாகப் பேசும் இநத ஸ்லோகத்தில் பக்தியும் ப்ரபக்தியும் உண்மை நிலையில் மணக்கின்றன.

திருவேங்கடவனைச் சேவிக்கும் போது இந்த ஸ்லோகத்தை உணர்ந்து உச்சரிப்பானாகில் தயா தேவி ப்ரத்யக்ஷ மாவாள் என்றே தோன்றுகின்றது.



ஸ்ரீ கிருஷ்ணசுவாமி
ஸ்ரீ கோவிந்தராஜசுவாமி கோயில்
திருப்பதி.

---

''விச்வோபகாரமிதி நாம ஸதா
துஹாநாம்
அத்யாபி தேவி பலதிமவதீரயந்தம்
நாதே நிவேசய வ்ருஷாத்ரி பதேர்
தயே த்வம்
ந்யஸ்த ஸ்வ ரக்ஷண பரம் த்வயி
மாம் த்வயைவ''

இப்படி எல்லாம் தயா தேவியின் விளையாட்டினைப் பேசி மகிழ்ந்த கவி யோசிக்கின்றார்.

''இப்படியெல்லாம் தயையைப் புகழ்ந்து அவளிடம் சரணம் புகுந்து என்னை ஸ்ரீநிவாஸனிடம் சேர்க்க வேண்டுமெனறு ப்ரார்த்திக்க எனக்கு என்ன யோக்யதை? ஸதா காலமும் ஸம்ஸாரத்தில உழன்று தாமஸ ராஜஸ குணங்களால் ஈர்க்கப்பட்டு அலையும் நான் உன் புகழ் பாடிச் சரணடைதல் ஓர் ஸாஹஸமே. உலக விஷயங் களிலும இப்படி ஸாஹஸங்கள் செய்யுமென்னை நீதான் தடுக்காமல் காப்பாற்றுகிறாய்.''

இயற்கையதிசயங்களில் ஒ ன் றி னே அழகிய உவமானமாக்கிப் பேசும் அழகு நோக்கத்தக்கது

ஒரு சிங்கம் வாழும் மலைக்குகை வாயிலிலுள்ள ம ர த தி ல் ஓர் பட்சி வாழ்கின்றது. அதனைக் குலிங்கப் பட்சி யென்பர். சாந்தியொடு ஸாத்வீகம் வீச உட்கார்ந்திருக்கும் அது அடிக்கடி ''மா ஸாஹஸம் குரு'' (ஸாஹஸம செய்யாதே) என்று கூவும். இதனை ஸாஹஸ பக்ஷி என்றும் சொல்வர்

குகையிலுள்ள சிங்கம் இரை தின்று அக்குகை வாயிலில் வந்து படுத்து உறங்கத்துவங்குகையில் கொட்டாவி விடும்.

அது வாய் திறந்து மூடுவதற்குள் இக் குலிஙக பட்சி மின்னல்போல பாய்ந்து பறநது அச்சிங்கத்தின பற்களிடையே யுள்ள மா மி ச த் து ண டி னை க் கொத்திக் கொண்டு மரத்தின் மேல் உட்கார்ந்து ''ஸாஹஸம்செய்யாதே'' என்று கூவும். என்ன ஆச்சரியம !

''செயலொன்று சொல்லொன்ருக இப்படி ஸ ா ஹ ஸ ங் க ள் செய்து உன்னைப் பாடும் எனனையும் நீதான் க ா ப் ப ா ற்றி திருவேங்கடவன்பால் சேர்கக வேணடும்'' என்று வேண்டு கிருர் தயா தேவியை.

''மா ஸாஹஸோக்தி கந கஞ்சுக
வஞ்சிதாந்யஃ
பச்யத்ஸு தேஷு விததாம்யதி
ஸாஹஸாநி
பத்மாஸஹாய கருணே ந ருணத்ஸி
கிம் த்வம்
கோரம் குலிங்க சகுநேரிவ
சேஷ்டிதம் மே''

(தொடரும்)

(8-ம் பக்கத் தொடர்ச்சி)

தில்லைநகர்த் திருச்சித்திரகூடத்தில் தொல்லி ராமனுய்த் தோன்றிய கதையைப் பத்து பாசுரங்களில் அமர்த்திய குலசேகராழ்வார், இறுதியாகப் பாடிய பாசுரத்தைப் பகர்வோம்:

''அன்றுசரா சரங்களைவை குந்தத் தேற்றி
அடலரவப் பகையேறி யசுரா தம்மை
வென்று, இலங்கு பணிநெடுநதோள் நான்கும் தோன்ற
விண்முழுது யெதிர்வரததன் தாமம் மேவி,
சென்றினிது வீற்றிருந்த வம்மான் றன்னைத்
தில்லை நகர்த் திருச்சித்ர கூடந் தன்னுள்,
என்றும் நின்ரு னவனிவனென் றேத்தி நாளும்
இறைஞ்சுமினோ வெப்பொழுதும் தொண்டீர் நீரே''.

அழகிய நீண்ட நான்கு திருத்தோள்கள் தோன்றவும் பரமபதத்தில் உள்ளோர் எல்லோரும் எதிர்கொண்டு வரவேற்றனர் ராமனை. தன்னுடைய வைகுண்டத்திலே போய்ப் புகுந்து, இனிதாகச் சிங்காதனத்தில் தன் பெருமை தோன்ற எழுந்தருளினன் ஸ்ரீ ராமன். தில்லைநகர்த் திருச்சித்திர கூடத்தில் நித்தியமாக வாழ்பவனை, தொண்டர்களாகிய நீங்கள் அவனை இடைவிடாமல் துதித்து நாள் தோறும் வணங்குங்கள், என ஆழ்வார் உபதேசிக்கிருர்.

இப்பத்து பாசுரங்களும், பத்தாம் பதிகத்தில் அமைந்த 'சம்பூர்ண இராமாயணமும்'' படிப்போரின் நெஞ்சினைக் கவரும் தன்மையன. ஆழ்வாரின் கம்பீரமாயமைந்த பாசுரங்கள் வாயினுல் பாடி மனத்தினுல் சிந்திக்கத்தக்கவைகள்.

## இவர் காலம்

குலசேகராழ்வார் எட்டாம் நூற்ருண்டு தொடக்கத்தில் வாழ்ந்திருக்க வேண்டுமென்பது ஆராய்ச்சி அறிஞர்களின் அபிப்பிராயம். இவ்வாழ்வாரும், திருமங்கையாழ்வார் தொண்டரடிப்பொடி ஆழ்வாரும் சமகாலத்தவர் எனக் கருதப்படுகிறது. இவர் ''திருச்சித்திரகூடம் தன்னுள் என்றும் நின்ருன்'' எனறு பாடியிருக்கும் பெருமாள் சந்நிதி எட்டாம் நூற்ருண்டிற்கு மிகவும் முற்பட்ட காலத்திலேயே இருந்திருக்க வேண்டும்.

## பெருமாள் திருமொழி

குலசேகராழ்வார் அருளிச் செய்துள்ள பிரபந்தம் ''பெருமாள் திருமொழி'' என்ற பெயரால் வழங்கப் படுகிறது. அதில் 105 பாசுரங்கள் உள்ளன. இவைப் பத்துத் திருமொழிகளாக முதலாயிரத்தில் நாச்சியார் திருமொழிக்கு அடுத்து இடம் பெறுகின்றன. இதனைத் தவிர வட மொழியில் ''முகுந்த மாலை'' என்ற ஒரு நூலையும் அருளியுள்ளார்.

சேர நாட்டை ஆண்ட இருபத்தைந்து அரசர்களுக்குப் பெருமாள்கள் என்ற சிறப்புப் பெயர் இருந்தது. அத்தகைய இருபத்தைந்து பெருமாள்கள் சேர நாட்டை ஒருவர் பின் ஒருவராக ஆண்டனராம். அவர்களில் குலசேகரர் என்ற பெயர் உடையவர்கள் இருவர் உள்ளனர். அவ்விருவரில் ஒருவர் நம் குலசேகராழ்வார். குலசேகரருக்குப் பெருமாள் என்ற சிறப்புப் பெயர் இருந்ததால் அவர் பாடிய திருமொழிக்குப் பெருமாள் திருமொழி எனப் பெயரிட்டனர்.

குலசேகராழ்வார் பெரிய பெருமாளாகிய இராமரிடத்தில் ஈடுபட்டு, இராமரைப் பற்றிய பாடல்கள் பாடியிருப்பதால், இவருடைய திருமொழிக்குப் பெருமாள் திருமொழி எனப் பெயர் வழங்கலாயிற்று எனவும் கூறுகிருர்கள்.

## மன்னனோடு கலந்த ஆழ்வார்

இறுதிக்கு வந்தோம்: குலசேகரரை மன்னனாக மகிழ்ந்தோம்; ஆழ்வாராகவும் அநுபவித்தோம். ஒன்றுமில்லாது வருந்துபவன் உலகை மறந்து கடவுளை வேண்டுவது இயல்பு. வேறு வழியின்றி அவ்வழியில் இன்பம் பெறுகிருன். எல்லாம் பெற்றுப் பெரு வாழ்வு வாழ்கின்ற அரசர்க்கரசன் அவற்றைத் துறந்து அடியாருக்கடியனய் ஆண்டவனை வேண்டுதல், அவனிடம் சரணமடைதல் அருமையினும் அருமை. அவ்வருமை குலசேகரருக்கு எளிதாயிற்று. அடியவரிடத்து அன்பு கொண்டொழுக வேண்டும் என்று முதன் முதல் வற்புறுத்தியவர் குலசேகராழ்வார்.

## புலைப்பாடியும் சிம்மாசனமும் கண்ட சம நிலை:

சிவநேசச் செல்வன் நந்தனரைப் பாடியில் கண்டோம்; குலசேகரரை அரசுரிமை கொண்டு, சிம்மாசனத்தில் பார்த்தோம். புலைப்பாடியை விட்டு தில்லைச் சிற்றம்பலத்தில் நந்தனர் பக்தப் பெருமகனக விளங்கினுர்; குலசேகர மன்னன் அரசைத் துறந்து, ஆழ்வாராகத் தில்லைத் திருச்சித்திர கூடத்தில் திகழ்ந்தார். வாழ்க்கையில் முறையே தாழ்ந்தும் உயர்ந்தும் இருந்திடினும் இருவரும் பக்திப் பெரு வெள்ளத்தில் நீந்தி சமநிலை அடைந்தனர்: அடியார்களை இருவரும் அன்புடன் ஆதரித்தனர். ஆடும் சிதம்பரத்தில் நடராஜனரையும், தில்லைத் திருச்சித்திரகூடத்து அறிதுயில் கொண்ட தொல்லி ராமனையும் நாம் கண்குளிரக் கண்டு மகிழ்ந்தோம். பக்தியோகத்தில் அமர்ந்த நந்தனரும், ஞான சிகரத்தில் பக்திக் காதலில் உச்ச நிலையடைந்த குலசேகராழ்வாரும் உலகம் உய்ய, நம் தென்னுட்டில் அவதரித்து, மக்களுக்கு இரு திலகங்களாக ஒளிவீசினுர்கள்; இன்னும் என்றும் அணிதிலகங்களாக விளங்குவார்கள்.

முற்றும்.

(5-ம் பக்கத் தொடர்ச்சி)

அப்படியே ஒவ்வொரு அங்கங்களாக வர்ணிக்கிறார்; அதிலும் இதே கார் முகில் வண்ண விளக்கங்கள்தாம்.

அடுத்து வருவது மிகக் குறுகிய காலத்துக்குள் நம் பாரத தேசத்தில், குறிப்பாக காவேரிக் கரையில் வாழ்ந்து முக்தியடைந்த மகான் ஸ்ரீ தியாகராஜர். அவர் ராமனையே நினைந்துருகி அவனை நேரில் பட்டாபி ராமனாகப் பார்த்தவர். அவருடைய சில கீர்த்தனைகளைக் கவனிப்போம்.

1. 'அந்துகு தயராதுரா' என்ற கீர்த்தனத்தின் சரணத்தில் 'நீரதாப சரீர' என்கிறார்.

2. 'கோடி நதுலு......' என்ற கீர்த்தனத்தில் அநுபல்லவியில் 'ஸ்ஃடிக ச்யாம ஸுந்தர மூர்த்தி நி' என்பதால் நீல வர்ண காந்தியுடைய மிகவும் கருத்த நீலமானது கார்முகிலுக்குச் சமம் என்பதையும் ஒத்துக் கொள்வோம்.

3. 'ச்யாம ஸுந்தராங்க ஸகல சக்தியு நீவோர' என்பதில் முகில் வண்ணம் பிரதி பலிக்கிறது.

இப்படியாகப் பல ஆழ்வார்கள், நாயன்மார்கள் திருத்தொண்டர்கள் பலவிதமாக அனுபவித்த பரம்பொருளின் கார்மேக நிறத்தினை, மேகங்களைக் காணும் போதாவது நாம் நினைத்தால், அவன் தன் அருள் மழையினைப் பொழிந்து நமக்கு உய்ய வழி காட்டுவான் என்பது திண்ணம்.

★

## சந்தாதாரர்களுக்கு...

31-3-79-ம் தேதியுடன் சந்தாக் காலம் முடிவடையும் சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. ஆகவே அவ்வெண்கள் உடைய சந்தாதாரர்கள் தங்கள் சந்தா எண்களைக் குறித்துக் கொண்டு தாங்கள் செலுத்த வேண்டிய தொகையைச் செலுத்தி தங்கள் சந்தாவைப் புதுப்பித்துக் கொள்ளவும். T

5, 72, 151, 152, 186, 361, 375, 473, 480, 508, 700, 738, 740, 774, 787, 1074, 1100, 1112, 1125, 1132, 1134, 1136, 1142, 1145, 1568, 1754, 1758, 1762, 1763, 1766, 1767, 1769, 1770, 1776, 1777, 1778, 1786, 1789, 1790, 1797, 1800, 1801, 1802, 1812, 1813, 1818, 1819, 1338, 1867, 2028, 2218, 2525 முதல் 2532 வரை, 2535 முதல் 2548 வரை, 2550 முதல் 2553 வரை, 2555, 2557 முதல் 2561 வரை, 2563, 2564, 2565, 2566, 2647.

## எங்களுடைய "ஸப்தகிரி" விற்பனைப் பிரதிநிதிகள்

திரு. என். வாசுதேவ பிரபு,
10-58, அமராவதி,
கொச்சின்-1.

திரு. ஏ. ஸ்ரீநிவாஸாசார்யா,
5-5-34 சிவாலயம் வீதி,
கரீம் நகர். ஆ. பி.

திரு. வை. முகந்தராவ்,
பிளாக் நெ. 10-391,
மங்களவார் பேட், பூனா-1.

திரு. ஸ்ரீராமன் ஏஜென்ஸி,
13. வடக்கு ஈஸ்வரன் கோயில் [தெரு,
ஃபோர்ட், ஈரோடு-1.

திரு. இ. எஸ். வி. ஜகன்னாத ராவ்,
டெலிபோன் ஆபரேட்டர்,
எஸ். இ. இரயில்வே, பிலாய்-3.

விஜயா ஏஜன்ஸீஸ்,
633, ஜே. பஜார்,
கரூர், திருச்சி மாவட்டம்.

ஸ்ரீமதி. ஜி. ராஜேஸ்வரி,
32, பிராமணர் வீதி,
நாடுபேட், குடியாத்தம்.

திரு. கே. சேஷாத்ரி,
1, தாதம் வீதி,
ஸ்ரீரங்கம் - 620006.

திரு. கணபதிராம் & கோ.,
68/1, சங்கரன் கிணர் தெருவு,
விருதுநகர்-626001.

மேற்குறிப்பிட்ட இடங்களல்லாது, மற்றைய நகரங்களுக்கு 'ஸப்தகிரி' ஏஜெண்ட்டுகள் தேவை. விற்பனையில் 25% கமிஷன் வழங்கப்படும். மேலும், ஏஜெண்ட்டுகள் இல்லாத இடத்திலிருந்து வரும் குறைந்தபட்சம் 5 பிரதிகள் அல்லது அதற்கு மேற்பட்ட பத்திரிகை சரக்காணைகளுக்கும் (Bulk orders) மேற்படி கமிஷன் தரப்படும்.

தொடர் கட்டுரை :

# முக்கவி கண்ட காப்பியம்

## "சுந்தர காண்டம்"

திரு. டி. ஜி. அனந்த சுப்ரமண்யம்,
(காபேயன்)
திருப்பதி:

அழுக்குப்படிந்த ஆடையுடன் கூடியவளும், அரக்கியர்களால் சூழப்பட்டவளாகவும் சீதையை ஹநுமார் பார்த்தார். இந்தக் கருத்தை கம்பர் வாகக் கூறுகிருர். இங்கேயே, அரக்கியர்கள் உறங்கியபின் திரிசடை உறங்காமல் இருப்பதை அறிந்த சீதை திரிசடையிடம் தன் கனவைக் கூறுதலை வர்ணிக்கிருர் கம்பர். ஆனல் வால்மீகி அவ்விதம் கூறவில்லை.

**वैदेह्या यानि चाङ्गेषु तदा रामोऽन्वकीर्तयत् ।**
**तान्याभरणजालानि शाखाशोभीन्यलक्षयत् ॥**

இராமன் எந்தவிதமான அடையாளங்கள் சொன்னனே அதே அடையாளங்கள் சீதையினிடம் காணப்பட்டன. ஆனல் சீதை தான் அணிந்திருந்த சில அணிகளை மரத்தின் கிளைகளில் கட்டி வைத்திருந்தாள். காரணம் என்னவெனில் கணவனின் பிரிவில் மங்கையர்கள் அணிகலன்களை அணிவது சம்பிரதாயமல்ல என்பதாகும். ஹநுமான் ருஷ்யமூக மலையில் பார்த்த நகைகள் இங்கு காணப்படவில்லை. இப்பொழுது இங்குக் காண்பதெல்லாம் இராமனல் கூறப்பட்டவை. ஆகையால் இவள் சீதையாகத்தான் இருக்க வேண்டுமென்று தீர்மானித்தார்.

**तान्त्रेवैतानि मन्त्रेऽहं यानि रामोऽन्वकीर्तयत्**

'இராமன் சொன்னதையெல்லாம் இங்கே நினைத்துப் பார்க்கிறேன்' என்று ஹநுமான் கூறுகிருர். இந்த வாக்யத்தையே கம்பரும் கீழ்வருமாறு கூறுகிருர்.

"எள்ளரும் உருவின் நல் இலக்கணங்களும்
வள்ளல் தன் உரையொடு மாறு கொண்டில
கள்ளவானரக்கன் அக்கமலக் கண்ணனுர்
உள்ளுரை உயிரினை ஒளித்து வைத்தவா',

இப்போது காணப்படுகின்ற இவளது வடிவம் நல்லிலக்கணங்கள் யாவும் அமையப்பெற்று இராமபிரான் கூறியபடியே உள்ளது என்று.

**बुद्धिर्बलं यशोधैर्यं निर्भयत्वम गता ।**
**अजाड्यं वाक्पटुत्वञ्च ह्नुमत मर ...वेत् ..**

ஹநுமா .ர தியானித்தால் அறிவு, வலிவு, புகழ், ஆண்மை, பய ம, நோய் இன்மை, ஊ .ம், பே சுத் திறமை முதலியவைகள் உண்டாகும் என்பதாகும். அத்தகைய ஹநுமான் சீதையைப் பார்த்தவுடன் கொ சம் கலங்கி விட்டார் என்பதை வால்மீகி கூறுகிருர்.

**स मुहूर्तमिवध्यात्वा बाष्पपर्याकुलेक्षणः ।**
**सीतामाश्रित्य तेजस्वी हनुमान् विललाप ह ॥**

சிறிது நேரம் தியானத்தில் இருந்துவிட்டு சீதையின் நிலைமையை நினைத்து வருந்தினர். இங்கு **विललाप** என்ற க்ரியாபதத்தை உபயோகித்துள்ளார் வால்மீகி; அதாவது வாய்விட்டு அழுதார் என்பதாகும். **लप-व्यक्तायां वाचि** என்ற தாதுவிலிருந்து உண்டானது. விசேஷமாக அழுதார் என்று பொருள்.

**सर्वान्भोगान् परित्यज्य भर्तृस्नेहबलात्कृता ।**
**अचिन्तयित्वा दुःखानि प्रविष्टा निर्जनं वनम् ॥**

சீதை கணவனின்மேல் உள்ள பக்தி, அன்பு, விச்வாசம் முதலியவைகளால் தன் எல்லாவித சுகங்களையும் மறந்து பலவித துன்பங்களை அனுபவித்துக் கொண்டு மனித மனமே அற்ற மரக்கட்டை போல் மற்ற எதையும் நினைக்காமல் தன்னை மாற்றிக் கொண்டாள்.

**एकस्थहृदया नूनं राममेवानुपश्यति ।**
**भर्ता नाम परं नार्याः भूषणं भूषणादपि ॥**

ஒரே மனதாக இராமனையே எப்பொழுதும் நினைத்துக்கொண்டிருப்பவளாகக் காணப்பட்டாள். பெண்களுக்குக் கணவன் தான் அழகு. அணிகளுக்கெல்லாம் அணியாக விளங்குபவன் கணவனே. சீதையின் நிலைமையை அறிந்து மனம் வருந்தி ம் மரத்தின கிளையின்மேல் அமர்ந்து கொண்டார்.

வால்மீகத்தில் சீதை இருக்குமிடத்திற்கு இராவணன் வந்து அவளை பலவாறுக மிரட்டித் தன்னை மணக்கும்படிக் கூற, அவள் மறுக்கப் பிறகு அங்குள்ள அரக்கிகளைக்கொண்டு சீதையைத் துன்புறத்தச் சொல்லிவிட்டுப் போய் விடுகிருன். அவர்களும் அவ்வாறே அச்சுறுத்தி வற்புறுத்துகையில் சீதை தன்னை இராமன் தேடி மீட்கவராமைக்குக் காரணங்களைப் பலவாறுகச்சந்தேகித்துத் தனதுபாக்கியக் குறைவே அதற்கும் காரணமென்று அறுதியிட்டு, இனி தனக்கு மரணமே சரணமென்று நிச்சயிக்க, அப்பொழுது திரிசடை தான் கண்ட கனவைக் கூறி அதன் பயனையும் கூறிச் சீதையைத் தேற்றுகையில் சீதைக்கு நன்னிமித்தங்கள் தோன்றின என்று கூறுகிருர். ஆனல் கம்பரோவெனில் திரிசடையின் சந்திப்பையும் அவளிடம் சீதை தன் கனவைப் பற்றிக் கூறுவதும், அவ்வமயம் இராவணன் வருகையையும் கூறுகிருர். நிற்க. அரக்கிமார்கள் தூங்கிய பின் சீதை தனக்குத் தோன்றிய நன்னிமித்தத்தைத் திரிசடையினிடம் கூறத் தொடங்குகிருள்.

" நலந் துடிக் கின்றதோ நான் செய் தீவினைச்
சலம் துடித்து இன்னமும் தருவது உண்மையோ!
பொலம் துடி மருங்குலாய் புருவங் கண்முதல்
வலந் துடிக் கின்றில வருவது ஓர்கிலேன்.''

'எனது இடப்புருவம், இடக்கண் முதலியன துடிக்கின்றதனல் இனியேனும்எனக்கு நன்மையுண்டாகுமோ.

அன்றித் தீவினைப் பயனே இங்ஙனம் தோன்றி எனக்கு ஒரு ஆசையை விளைத்து அதன் மூலமாக எனக்குத் துன்பத்தை மிகுவிக்கப் பார்க்கின்றதோ!' என்று கூறி வருந்துகிறாள்.

கம்பர், அரக்கியர் தூங்கிய பிறகு திரிசடையிடம் இக்கருத்தை சீதை சொன்னதாகக் கூறுகிறார். ஆனால் வால்மீகத்தில் சீதை தன் துக்கத்தைத் தாங்க முடியாமல்,

शोकाततप्ता बहुधाविचिन्त्य सीताथ वेण्युद्ग्रथनं
गृहीत्वा ।
उद्बध्य वेण्युद्ग्रथनेन शीघ्रं अहं गमिष्यामि
त्रमस्थ मूलम् ।।
उपस्थिता सा मृदुसर्वगात्रा शाखां गृहीत्वाथ
नगस्य तस्य ।
शोकानिमित्तानि तथा बहूनि धैर्याजितानि
प्रवराणि लोके ।।
प्रादुर्निमित्तानि तदा बभूवुः पुरापि सिद्धान्यु-
पलक्षितानि ।

தன் பின்னலை அருகிலிருந்த சிம்சுபா மரத்தின் கிளையில் கட்டித் தூக்குப் போட்டுக் கொள்வதாகத் தீர்மானித்து கிளையை பிடிக்கும் சீதைக்கு ''நல்ல சகுனங்கள் தென்பட்டன'' என்று கூறுகிறார்.

तस्याः शुभं वाममरालपक्ष्मराजीवृतं कृष्णविशाल-
शुक्लम् ।
प्रास्पन्दतैकं नयनं सुकेश्याः मीनाहतं पद्ममिवाभि-
ताम्रम् ।।
भुजश्च चार्वञ्चितपीनवृत्तः परार्ध्यमालागरु-
चन्दनार्हः ।
अनुत्तमे नाध्युषितः प्रियेन चिरेणवामः समवेप-
ताशु ।।

அழகான நீண்ட கண்களில் இடது கண் துடித்தது. அது எப்படி இருந்த தென்றால் குளத்தில் இருக்கிற தாமரை மலரினை மீன் அடித்து அசைத்தால் எப்படி இருக்குமோ, அவ்விதம் தாமரை மலர் போன்ற கண் துடித்தது என்கிறார். இந்த அபிப்ராயத்தை கம்பர் அப்படியே கூறுகிறார்.

'' முனியொடு மிதிலையின் முதல்வன் முந்து நாள்
துனியறு புருவமுந் தோளும் நாட்டமும்
இனியன துடித்தன வீண்டுமாண்டெனா
நனிதுடிக் கின்றன ஆய்ந்து நல்குவாய்.''

சீதை திரிசடையிடம் கேட்கிறாள். ''ஹே! திரிசடையே! இராமபிரான் விச்வாமித்ர முனிவரோடு முன்பு மிதிலாபுரியிற் புகும்போது எனக்கு இடப்பக்கம் துடித்தது போலவே இப்போதும் இடம் துடிக்கின்றதே! இவ்இலங்கையில் எனக்கு அவ்வாறான நன்மை யாது விளையும்? இதன் பயனை ஆராய்ந்து சொல்லுக'' என்று கேட்கிறாள். வால்மீகி இன்னும் பல நல்ல சகுனங்களைக் குறிப்பிடுகிறார். ஆனால் அபசகுனங்களை இந்த இடத்தில் கூற வில்லை. கம்பரோ வெனில் அபசகுனங்களையும் சீதைக் கூறியதாகக் கூறுகிறார். வால்மீகத்திலோவெனில் அரக்கியர்களின் முன்னிலையிலேயே திரிசடை தன் கனவைப்பற்றிக் கூறியதாக இருக்கிறது.

सीतां ताभिरनार्याभिर्दृष्ट्वा सन्तर्जितां तदा ।
राक्षसी त्रिजटा वृद्धा शयाना वाक्यमब्रवीत् ।।

அந்தப் பண்பற்ற அரக்கியர்களால் மிரட்டப்படுகிற சீதையைப் பார்த்து வருந்தி திரிசடை அரக்கியர்களைப் பார்த்து கூறுகிறாள்:

आत्मानं खादतानार्या न सीतां भक्षयिष्यथ ।
जनकस्य सुतामिष्टां स्नुषां दशरथस्य च ।।
स्वप्नो ह्यद्य मया दृष्टः दारुणो रोमहर्षणः ।।

''ஹே! துஷ்டர்களே! சீதையைச் சாப்பிடுவதற்குப் பதில் என்னைச் சாப்பிடுங்கள். அவள் எத்தகையவள் தெரியுமா? ஜனக மகாராஜனின் மகள். அது மட்டுமன்று. தசரதனுடைய மருமகள். இன்று நான் ஒரு கனவு கண்டேன். அது மிகவும் பயங்கரமானது.'' என்று கனவைப்பற்றி ஒளிவு மறைவு இல்லாமல் கூறினாள். இந்நிகழ்ச்சியை கம்பரிடம் பார்ப்போம்.

'' எண்ணெய் பொன் முடிதொறும் இழுகி ஈறு இலா
திண்ணெடுங் கழுதைபேய் பூண்ட தேரின்மேல்
அண்ணல் அவ்விராவணன் அரத்தம் ஆடையன்
நண்ணினன் தென்புலம் நவைஇல் கற்பினாய்''

இராவணன் தனது பத்துத் தலைகளிலும் எண்ணெய் தேய்த்துக் கொண்டு கழுதையும், பேயும் பூட்டிய தேரின் மீதேறி இரத்தவாடையுடன் தென்திசை நோக்கிச் செல்வதாகவும், மேலும்,

'' மக்களும் சுற்றமும் மற்று உளோர்களும்
புக்கனர் அப்புலம் போந்தது இல்லையால
சிக்குஅற நோக்கினன் தீய இன்னமும்
மிக்கன கேட்கென விளம்பல் மேயினான்''

இராவணன் எந்தத் திசையாகச் சென்றானோ அந்தத் தென்திசை நோக்கியே அவனது மக்களும் சுற்றத்தாரும் திரும்பி வராமலே செல்லக் கணக் கண்டதாகவும் கூறுகின்றார். கம்பர் சொன்னதை விட கொஞ்சம் விவரமாக வால்மீகி கூறுவதைப் பார்ப்போம்.

रथेन खरयुक्तेन रक्तमाल्यानुलेपनः ।
पिबंस्तैलं हसन् नृत्यन् भ्रान्तचित्ताकुलेन्द्रियः ।।
गर्दभेन ययौ शीघ्रं दक्षिणां दिशमास्थितः ।
रावणस्य सुताः सर्वे दृष्टास्तैल समुक्षिताः ।।
वराहेण दशगीवः शिशुमारेण चेन्द्रजित् ।
उष्ट्रेण कुम्भकर्णश्च प्रयातो दक्षिणां दिशम् ।।

இராவணன் சிவப்பு மாலையுடன் செஞ்சந்தனம் பூசி, கழுதை பூட்டிய தேரில், எண்ணெய் பூசிக்கொண்டும் சிரித்துக்கொண்டும் ஒரே மதி மயக்கம அடைந்தவனாக உட்கார்ந்து கொண்டு தென்திசையை நோக்கிச் செல்லுகிறான். அவனுடன் எண்ணெய்த் தேய்த்துக் கொண்டு பன்றி பூட்டியத்தேரில் இராவணனின்பிள்ளைகளும் அவனோடு செல்லுகிறார்கள். மேலும் சிம்சுமார மிருகம் பூட்டியத் தேரில் இந்திரஜித்தும், ஒட்டகம் பூட்டியத் தேரில் கும்பகர்ணனும் தெற்கு நோக்கிச் சென்றார்கள் என்றும் கூறுகிறார். இந்தக் கருத்தைத் துளசிதாஸரும் அப்படியே கூறுகிறார்.

खर आरूढ नगन दससीता
मुंडित सिरखंडित भुज बीसा ।
एहि विधि सो दच्छिन दिसि जाई
लंका मनहुं विभीषण पाई ।। ''

கழுதையின்மேல் ஏறி, தலையை முண்டனம் செய்து கொண்டவனாகவும், இருபது கைகள் அறுபட்டவனாகவும் தெற்கு திசையை நோக்கி இராவணன் செல்லுவதாகக் கூறியுள்ளார். இச்சமயத்தில் விபீஷணன் இலங்கையை ஆளுகிறான் என்றும் கூறுகிறார். இந்தக் கருத்தையே அத்யாத்ம ராமாயணமும் கூறுகிறது.

(தொடரும்)

# செய்திச் சுருக்கம்

திருமலை திருப்பதி தேவஸ்தானத் தாரின் ஆதரவில் 3வது ஹாக்கிப் போட்டி ஒன்று திருப்பதியில் 24-12-78 முதல் 27-12-78 வரை நடைபெற்றது. தி. தி தேவஸ்தான அணி உள்ளிட்டு தென்னிந்தியாவைச் சார்ந்த 13 அணிகள் இப்போட்டியில் பங்கேற்றன. நான்கு நாட்கள் நடைபெற்ற இப்போட்டியினை 24-12-78 அன்று, சந்திரகிரி துணை ஆட்சியாளர் திரு. ஏ. பி. வி. என். சர்மா ஐ ஏ.எஸ் அவர்கள் தொடக்கி வைத்தார். இதனை ஒட்டி அன்று காலை ஏற்பாடு செய்யப்பட்ட ஆரம்ப விழாவிற்கு தி. தி. தேவஸ்தான செய லாட்சித் தலைவர் திரு. பி.வி.ஆர்.கே. பிரஸாத் அவர்கள் தலைமை வகித்து உரையாற்றுகையில், இது போன்ற போட்டிகள் எவ்வகையில் கட்டுப் பாட்டு உணர்வினையும், கூட்டுணர் வினையும் தோற்றுவித்து, அவை வளர காரணமாகின்றன என்பதையும், தேவஸ்தானம் நடத்தும் இது போன்ற போட்டிகளை உள்ளூர் கல்லூரி மாண வர்களும், பொது மக்களும் ஒரு நல் வாய்ப்பாக பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்றும் கூறினார். அதற்கு முன்னர், போட்டியினைக் காண வந்தோரை, திருப்பதி தி. தி. தேவஸ் தான கலைக்கல்லூரி முதல்வர் திரு. ஏ. பி. ராமசுப்பா ரெட்டி அவர்கள் வரவேற்றார். இப்போட்டியின் இறுதி ஆட்டம் 27-12-78 அன்று மழையின் காரணமாக நடைபெறாதலால் "பூவா தலையா" மூலம் வெற்றி தோல்வி முடிவு செய்யப்பட்டதன் விளைவாக, ஹைதராபாத்தைச் சார்ந்த பி. எச். இ எல். அணிக்குழுக்கு வெற்றிக்கோட் பையும், வெள்ளிப் பதக்கங்களும். ஈற்றயற் போட்டி வரை தகுதி பெற்ற செகந்திராபாத்தைச் சார்ந்த கார னேஷன் ஹாக்கி கிளப் அணிக்குழு வினர்க்கு வெள்ளிப் பதக்கங்களும் திரு. என் வரதாச்சாரியார் அவர் களால் வழங்கப்பட்டன.

## கால் பந்தாட்டப் போட்டி

தி.தி. தேவஸ்தானத்தின் ஆதரவில் 3வது ஆந்திர பிரதேச கால் பந் தாட்டப் போட்டி திருப்பதியில் 4-2-79 முதல் 7-2-79 வரை நான்கு நாட்கள் நடைபெற்றது.

## வேதபாராயண திட்டம்

வேதங்களின் பெருமையைப் பு ப் பும் வகையில் திருமலை திருப்பதி தேவஸ்தானம் முயற்சிகள் பலவற்றை அண்மையில் மேற்கொண்டுள்ளது. ஆந்திர பிரதேசத்தில் வேதபாராயண திட்டத்தினை மேற்கொண்டு, இதற் காக தேவஸ்தானம் இவ் நடப்பு ஆண்டுக்காக ரூ 5 இலட்சம் ஒதுக்கி யுள்ளது. இத்திட்டத்தின் கீழ், ஆந்திர மாநிலத்தில் வேதபண்டிதர்கள்-கன பாடிகள், கிரமபாடிகள் ஆகியோர் நியமிக்கப்பட்டு, அவர்கள் மூலம் நாள் தோறும் குறைந்தபட்சம் 3 மணி நேரம் வேத பாராயணம் செய்ய முயற்சிகள் மேற்கொள்ளப்பட் டுள்ளன. 70 வயதுக்கு மேம்பட்ட வயதான பண்டிதர்கள் அவர்கள் இருப்பிடத்திலேயே வேதங்களை ஓத அனுமதிக்கப்பட்டுளளனர். இத்திட் டத்தின கீழ், ஏறக்குறைய எல்லா மாவட்டங்களிலும் (ஆந்திர மாநிலம்) இதுவரை 220 பண்டிதர்கள் நியமிக கப்படடுள்ளனர் மாதம் ஒன்றுக்கு கனபாடிகளுக்கு தலா ரூ 300-ம, கிரமபாடிகளுககு தலா ரூ 200-ம் வயதான பண்டிதர்களுக்கு தலா ரூ. 100-ம் கொடுக்கப்படும். ஆகவே இத்திட்டத்தினை ஆந்திர மாநிலத்தில் வாழும் வேத பண்டிதர்கள் ஒரு நல்ல வாய்ப்பாகக் கொள்ளுதல் வேண்டும் என்று தி. தி. தேவஸ்தான செய லாட்சித் தலைவர் திரு. பி.வி.ஆர்.கே. பிரஸாத் அவர்கள் பணடிதர்களைக் கேட்டுக் கொண்டார்.

## வேத ரக்ஷண திட்டம்

வேத பண்பாட்டினைப் போற்றிப் பாதுகாக்கவும், சமயக் கல்வியின் அவசியத்தை இளைஞர்களிடையே பரப்பவும், தி தி. தேவஸ்தானம் திட்டம் ஒன்றினை மேற்கொண் டுள்ளது. இத்திடடத்தின் கீழ், ஆந் திர மாநிலத்தில் விஜயவாடாவி லுள்ள லப்பிப்பேட்டையில் இருக்கும் வேத ரக்ஷண அறக்குழுவின் சார்பில் செயறபடும் வேத பள்ளி நடத்திவரும் தேர்வில் வெறறிபெறும மாணவர் களுக்கு சான்றிதழ்கள் மட்டுமின்றி, ஒவ்வொரு மாணவனுக்கும் ரூ. 5000/-ம், ஆயுள் முழுதும் மாதத் திற்கு ரூ. 65/-ம வழங்கப்பட உள்ளது. இவ்வகையில், இவ்வாண்டுக்கான பட்டமளிப்பு விழா அண்மையில் விஜய வாடாவில் நடைபெற்றது. வேத பண்டிதர்கள் பலர் பங்கேற்ற இவ் விழாவிற்கு தி தி. தேவஸ்தான செய லாட்சித் தலைவர் திரு. பி.வி.ஆர்.கே. பிரஸாத் அவர்கள் தலைமை வகித்தார். தன் தலைமை உரையில் அவர், வேத பண்டிதர்களின் பிள்ளைகளுக்கு வேதம் கற்றுக்கொள்வதில் ஓர் ஆர்வத்தை உண்டாக்கவும், அவர்களின் மூலம் வேத பண்பாட்டினைப் பாதுகாக்கவும் இத்திட்டம் மேற்கொள்ளப்படுவ தாகக் குறிப்பிட்டு, தி. தி. தேவஸ்தா

அண்மையில் காஞ்சி காமாட்சி கோயிலுககென 3 கிலோ தஙகததினை, ஸ்ரீ காஞ்சி காம கோடி பீடம் ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகளிடம் தேவஸ்தானம் வழங்கியது.



னத்தின் மற்றும் திருமதி. எம். எஸ் சுப்புலட்சுமி அவர்களின் நிதி உதவியைக் கொண்டு இத்திட்டம் செயற்படுத்தப்படுகிறது என்றும் கூறினார். தொடர்நது பேசுகையில் ஆந்திர மாநிலத்திலுள்ள கோவில்களில் தி.தி. தேவஸ்தானத்தாரால் நியமிக்கப்படும் வேதபாராயணதாரர்களுக்கு சிறப்பூதியம் வழங்கவும் தேவஸ்தானம முடிவு செய்துள்ளது என்றும் கூறினார். இவ்விழாவின்போது, ஓய்வு பெற்ற உயர் நீதிமன்ற நீதிபதி திரு. கொல்லபூடி வெங்கடராமசாஸ்திரி, திருப்பதி இந்து தர்ம பிரதிஷ்டானத்தின் செயலாளர் டாக்டர் டி. அாககசோமயாஜி, திரு. மத்துலபாலி மாணிக்ய சாஸ்திரி, திரு. குப்ப லக்ஷமணவதானி ஆகியோரும் பங்கேற்று உரையாற்றினர். இவ்விழாவில் 11 மாணவர்கள் சான்றிதழ்களும், பரிசுகளும் பெற்றனர்.

## உந்து பநதாட்டப் போட்டி

தி. தி. தேவஸ்தானத்தின ஆதரவில் திருப்பதியில் இரண்டாவது உநது பந்தாட்டப் போடடி 28-1-79 முதல் 30-1-79 வரை மூன்று நாட்கள நடைபெற்றது. இப்போட்டியில் தி. தி. தேவஸ்வான அணி உள்ளிட்டு, 11 அணிகள் பங்கேற்றன. 28-1-79 அன்று காலை, இப்போட்டி ஒட்டி ஏற்பாடு செய்யப்பட்ட விழாவிற்கு தி. தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் திரு. பி.வி.ஆர் கே. பிரஸாத் அவர்கள் தலைமை வகிக்க, போட்டியினைக் காணவந்தோரை, தி தி தே. விளையாட்டுக் குழு உறுப்பினர் திரு. ஆர். வி. ராஜீவலோசன் அவர்கள் வரவேற்றார் இப்போட்டியினைத் துவக்கிவைத்து உரையாற்றிய, அனைத்திந்தியக் கால பந்தாட்டக் குழுவின துணைத் தலைவர் திரு. என். விட்டல் அவர்கள் தமமுரையில், உலகத்தில் எநதச் சமயமும மேற்கொள்ளாத இது போனற விளையாட்டுப் போட்டிகளை தேவஸ்தானம் நடத்தி வருவது, மறைமுகமாக சமய உணர்வினை விளையாட்டு வீரர்களிடையே பரப்பி, அவர்களிடையே ஒழுங்கு மற்றும் கட்டுப்பாட்டு உணர்வு வளருவதற்கு வழிவகுக்கின்றது என்றும், எதிர்காலத்தில் திருப்பதியில் அனைத்திந்திய அளவில் பெரும் திட்டத்தின் கீழ் பல்வேறு விளையாட்டுப் போட்டிகள் நடைபெற தன்னாலியன்ற உதவினை வழங்க உறுதி அளித்து தொடர்ந்து பேசுகையில் பல்வேறு விளையாட்டுப் போட்டிகள் நடைபெற திருப்பதியில் ஒரு பெரிய விளையாட்டு அரங்கு ஒன்றினைக் கட்ட தேவஸ்தானம் எல்லாவித முயற்சிகளையும் மேற்கொள்ள வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டார். 30-1-79 அன்று இரவு 7 மணி அளவில் மின் ஒளிவெள்ளத்தில் (Flood light) நடைபெற்ற இறுதிப் போட்டியில், செகந்திராபாத்தைச் சார்ந்த தென் மத்திய இரயில்வே அணி 3-1 என்ற நிலையில் ஹைதராபாத்தைச் சார்ந்த ஆர்டிலரி சென்டர் அணியை தோற்கடித்தது அன்று இரவு 9 மணி அளவில் நடைபெற்ற பரிசளிப்பு விழாவிற்கு, ஆந்திர மாநில சித்தூர் மாவட்ட ஆட்சியாளரும் தணடலாளருமான திரு. டி. ராம கிருஷ்ணய்யா ஐ. ஏ. எஸ். அவர்கள் தலைமைவகிக்க, திருமதி. கோபிகா பிரஸாத் அவர்கள் (தி. தி. தே. செயலாட்சித் தலைவரின் துணைவியார்) மேறகூறிய இரு அணியினர்க்கும் வெற்றிக் கோப்பையும், வெள்ளிப் பதககங்களையும் வழங்கினார். இறுதியில் தி. தி. தேவஸ்தான ஊழியா நல அலுவலர் திரு. எம். ராமகிருஷ்ணய்யா அவர்கள் நன்றி நவின்றார்.

## நினைவு நாள் விழா

கி. பி. 15-ம் நூற்றாண்டைச் சார்ந்த தெலுங்குக் கவிஞரும், ஸ்ரீ வேங்கடேஸவரரின் தீவிர பக்தருமான ஸ்ரீ அன்னமாச்சார்யா அவர்கள் துந்துபி ஆண்டு பால்குண மாசம் பகுள துவாதசி அன்று இயற்கை எய்தினார். இலககியச் சுவையும், பக்திச் சுவையும் மிகுந்த சுமார் 32,000 கீர்த்தனைகளை ஸ்ரீ வேங்கடவன்மேல் இயற்றி அருளியுள்ளார். அன்னாரின் நினைவு நாள் ஒவ்வொரு மாதமும் அதாவது பகுள துவாதசி அன்று கொணடாட தேவஸ்தானம் முடிவு செய்துள்ளதை ஒட்டி, அன்னாரின் இம்மாத நினைவு நாள் 25-1-79 அன்று திருப்பதியில் ஸ்ரீ அன்னமாச்சார்யா கலாமந்திரததில் கொண்டாடப்பட்டது. தி. தி. தே சதஸ் கலைஞர்களான குமாரி. ஆர். ஜி. ஷோபா ராஜு மற்றும் திரு ஜி. பாலகிருஷ்ண பிரஸாத் ஆகியோரின் இறைவணக்கப் பாடல்களைத் தொடர்ந்து விழாவிற்கு வருகை புரிந்தோரை, 'அன்னமாச்சார்யா திட்டத்தின்' சிறப்பு அலுவலரான திரு. கே. ஸ்ரீநிவாசலு செட்டி அவர்கள் வரவேற்றுப் பேசுகையில், தேவஸ்தானத்தாரால் நியமிக்கப்பட்ட இசைக் கலைஞர்கள் (வித்வான்கள்) அன்ன மாச்சார்யா கீர்த்தனைகளின் புகழ் பரப்பும் வகையில் தங்களாலியன்ற முயற்சிகளை மேற்கொள்ள வேணடுமென்றுகேட்டுக் கொணடார்.

விழாவிற்குத் தலைமை வகித்துப் பேசிய, தி. தி. தே, செயலாட்சித் தலைவர் திரு. பி.வி ஆர்.கே. பிரஸாத் அவர்கள், அன்னமாச்சார்யாவின் கீர்த்தனைகளின் தனிச சிறப்பினை உலகு அறியும வகையில், இப்பணிக்காகவே ஒரு தனித்துறையை ஆரம்பித்து, சிறப்பு அலுவலர்களை நியமித்து தேவஸ்தானம மேற்கொணடு வரும் முயற்சிகளை விளக்கிக் கூறி, அன்னமாச்சார்யா பிறந்த கடப்பை மாவட்டத்தில் உள்ள தாள்ளபாக்கம் எனும் கிராமத்தினை தேவஸ்தானமே தன் நேரடி பொறுப்பில் ஏற்று, அதனை ஓர் ஆன்மீக மற்றும் கலை நிலையமாக செயறபடுத்தவும தேவஸ்தானம் எண்ணி வருகிறது என்றும் கூறினார்.

இவ்விழாவில் பங்கேற்றுப் பேசிய திருப்பதி இந்து தர்ம பிரதிஷ்டானத்தின் செயலாளரான டாக்டா. டி. அர்க்க சோமயாஜி அவர்கள், இசையின மூலம்தான் பாமர மக்களிடையே ஆன்மிகச சூழ்நிலையை ஏற்படுத்த முடியும் என்று கூறி, அதற்கு அன்னமய்யாவின் கீர்த்தனைகள் பெரிதும் உதவும் வகையில் உள்ளன என்றும் கூறினார். தி. தி. தே. பொது ஜனத் தொடர்பு அலுவலர் திரு. ஆர். சூர்ய நாராயணமூர்த்தி அவர்கள் உரையாற்றியபோது, தெலுஙகு இலக்கியத்திற்கும், பக்தி இலக்கியத்திற்கும் ஒரு புதிய வடிவம் கொடுத்த அன்னமய்யாவின் சிறப்பினை விளக்கிப் பேசினார். விழாவிறகுப் பின் திருவாளர்கள். டி. பசுபதி, எஸ். ஆர். ஜானகிராமன், ஜி. பாலகிருஷ்ண பிரஸாத் மறறும் திருமதி. பட்டு ராஜகோபாலன், திருமதி. கனகரத்தினம், குமாரி. ஆர். ஜி. ஷோபாராஜு, குமாரி பார்வதி, குமாரி மைதிலி ஆகியோரின அன்ன மாச்சார்யா கீர்த்தனைகள் சம்பந்தப்பட்ட இசை நிகழ்ச்சிகள் நடைபெற்றன.



திரு. பி. வாசுதேவன அவர்கள் 29-1-79 முதல், திருமலையில் புதிய பெயிஷ்காரராக நியமிக்கப்பட்டுள்ளார்.

# ராசிபலன் (1-2-79 முதல் 28-2-79 வரை)

டாக்டர் டி. அர்க்கசோமயாஜி, M.A., Ph.D.
திருப்பதி.

## மேஷம்

(அசுவனி, பரணி, கார்த்திகை முதல் பாதம் முடிய)

ராகுவினால் கவலைகள். சனியினால் பண நஷ்டம் அல்லது கருத்து வேறுபாடுகள் அல்லது தன் மக்களிடமிருந்து பிரிவு. குருவினால் உறவினர் கள்மூலம் கவலைகள். சுக்ரனால் பண வரவு அல்லது புதிய ஆடை ஆபரணங்கள் கிடைக்கப் பெறல் அல்லது நல்ல நடவடிக்கைகளில் ஈடுபடுதல். சூரியனாலும், செவ்வாயினாலும் வெற்றி, பணவரவு, உடல்நலமேன்மை அல்லது பதவி உயர்வு. புதனாலும் பணவரவு, எதிரிகளை வெற்றிகொளல், வாகன வாய்ப்பு அல்லது மக்கட் பேறு.

## ரிஷபம்

(கார்த்திகை 2-ம் பாதம் முதல், ரோகிணி, மிருக சீரிஷம் 2-ம் பாதம் முடிய)

ராகுவினால் கருத்து வேறுபாடுகள். சனியினால் பண நஷ்டம் அல்லது உற்றார் உறவினரிடமிருந்து பிரிவு. குருவினால் ஏமாற்றங்கள். சுக்ரனால் புதிய ஆடை ஆபரணங்கள் அல்லது புதிய வீடு வாங்குதற்குரிய வாய்ப்பு. செவ்வாய் 19-ம் தேதி வரை தீமை பயப்பதால் பண நஷ்டம் அல்லது இகழ்ச்சிக்குள்ளாதல் ஆனால் பிறகு பண வரவும், வெற்றியும். சூரியனால் 15-ம் தேதி வரை உடல் நலம் கெடல் அல்லது பண நஷ்டம், அல்லது முயற்சிகள் தோல்வியடைதல் ஆனால் பின்னர் வெற்றி கிடைக்கப் பெறல். புதனால் 11-ம் தேதி வரை முயற்சிகளை மேற்கொள்ளும்போது இடையூறுகளுக்குள்ளாதல் ஆனால் பின்னர் பண வரவும், வெற்றியும்.

## மிதுனம்

(மிருக சீரிஷம் 3-ம் பாதம் முதல், திருவாதிரை, புனர் பூசம் 3-ம் பாதம் முடிய)

ராகுவினால் பண வரவு. சனியினால் பண வரவு அல்லது வாகன வாய்ப்பு, உடல்நல மேன்மை, குடும்பத்தில் மகிழ்ச்சி. குருவினால் பண வரவு, எதிரிகளை வெற்றிகொளல். சுக்ரனால் பெண்களின்மூலம்தொல்லைகளுக்குள்ளாதல். சூரியனால் மாதத்தின் மறுபாதியின் போது உடல் நலம் கெடல். குறிப்பாக பண நஷ்டம், ஏமாற்றங்கள். செவ்வாயினால் மாதத்தின் 15-ம் தேதி வரை உடலுக்கு தீங்கு ஏற்படல் அல்லது பண நஷ்டம் அல்லது இகழ்ச்சிக்குள்ளாதல், பின்னர் பண நஷ்டம் அல்லது இகழ்சசிக்குள்ளாதல். புதனால் 11-ம் தேதி வரை பண வரவு, வெற்றி, புதிய ஆடை ஆபரணங்கள் அல்லது மக்கட்பேறு ஆனால் பிற்பகுதியில் முயற்சிகள் தோல்வியடைதல்.

## கடகம்

(புனர் பூசம் 4-ம் பாதம் முதல பூசம் ஆயில்யம் முடிய)

ராகுவினால் பண நஷ்டம். சனியினால் பண நஷ்டம் மற்றும் மகிழ்ச்சியின்மை. குருவினால் கருத்து வேறுபாடுகள், பண நஷ்டம் அல்லது மதிப்புக் குறைதல். சுக்ரனால் இகழ்ச்சிக்குள்ளாதல் அல்லது உடல்நலமின்மை. செவ்வாயினால் மனைவியுடன் கருத்து வேறுபாடு கொளல் அல்லது 19-ம் தேதி வரை கண அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோய்களினால் அவதியுறல், பிற்பகுதியில் பண நஷ்டம், மதிப்புக்குறைதல். சூரியனால் 15-ம் தேதி வரை பிரயாணம், வயிறு சம்பந்தப்பட்ட நோய்களினால் அவதியுறல் பிற்பகுதியின்போது உடல்நலம் கெடல், மனைவிக்கு மனயமைதியின்மை. புதனால் 11-ம் தேதி வரை கருத்து வேறுபாடுகள் ஆனால் பிற்பகுதியில் பண வரவு, வெற்றி அல்லது புதிய ஆடை ஆபரணங்கள் கிடைக்கப் பெறல் அல்லது மக்கட்பேறு.

## சிம்மம்

(மகம், பூரம, உத்திரம் முதல் பாதம் முடிய)

ராகுவினால் கவலைகள். சனியினால் உடலுக்கு தீங்கு ஏற்படல் அல்லது உற்றார் உறவினரிமிருந்து பிரிவு, அல்லது பிரயாணம் அல்லது பண நஷ்டம் அல்லது தன் பிள்ளைகளுடன் கருத்து வேறுபாடுகள். குருவினால் பிரயாணமும், உடல்நலம் கெடலும். சுக்ரனால் உறவினர்கள் வருகை அல்லது பெரியோர்களின் பாராட்டுதல்களுக்குள்ளாதல், அல்லது புதிய நட்புறவுகள் அல்லது பண வரவு அல்லது மக்கட்பேறு. சூரியனால் மாதத்தின் முதல் பகுதியின்போது உடல்நல மேன்மை, எதிரிகளை வெற்றி கொளல். ஆனால் மாதத்தின் பிற்பகுதியில் பிரயாணம் மற்றும் வயிறு சம்பந்தப்பட்ட நோய்களினால் அவதியுறல். செவ்வாயினால் மாதத்தின் 19-ம் தேதி வரை பண வரவு, வெற்றி ஆனால் இறுதியில் மனைவியுடன் கருத்து வேறுபாடு கொளல் அல்லது கண் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோய்களினால் அவதியுறல். புதனால் 11-ம் தேதி வரை வெற்றி அல்லது பதவி உயர்வு ஆனால் இறுதியில் தீவிர வேறுபாடுகளுக்குள்ளாதல்.

## கன்னி

(உத்திரம் 2-ம் பாதம் முதல், அஸ்தம், சிததிரை 2-ம பாதம் முடிய)

ராகுவினால் பண நஷ்டம். சனியினால் கவலைகள், குருவினால் பண வரவு அல்லது மதிப்புயர்தல். சுக்ரனால் நல்ல நண்பர்கள், சூரியனால் மாதத்

தின் முதற் பகுதியில் உடல் கெடல் அல்லது எதிரிகளால் துன்பங்கள் ஏற்படல், செவ்வாயினுல் 19-ம தேதி வரை தன் மக்களால் கவலைகளுக்குள்ளாதல், அல்லது உடல்நலம் கெடல் அல்லது எதிரிகளால் துன்பங்களுக்குள்ளாதல் ஆனுல் இறுதியில் பண வரவு, எதிரிகளை வெற்றி கொளல். புதனுல் 11-ம தேதி வரை மனைவியுடன் கருதது வேறுபாடுகள். அல்லது மனயமைதியினமை ஆனுல் இறுதியில் வெற்றி அலலது பதவி உயர்வு.

## துலா

(சித்திரை 3-ம்பாதம் முதல், ஸ்வாதி, விசாகம 3-ம் பாதம் முடிய)

ராகுவினுல் மகிழ்ச்சிக்குரிய நிகழ்ச்சிகள் வீட்டில் நடைபெறல். சனியினுல் பணவரவு. குருவினுல் பண நஷ்டம் அல்லது மதிப்புக குறைதல். சுகரனுல் பண வரவு, மதிப்புயாதல் அல்லது புதிய ஆடை ஆபரணங்கள் கிடைககப் பெறல். சூரியனுல் மாததகின் முதல் 14 நாட்களின்போது உடல் நலம் கெடல், மாதத்தின் பிற்பகுதியின் போது எதிரிகளால் கவலைகள். அல்லது உடல் நலம் கெடல், செவ்வாயினுல் 19-ம் தேதி வரை உடல் நலம் கெடல் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோயினுல் அவதியுறல் அல்லது தீயோரால் துனபங்களுக்குள்ளாதல், இறுதியில் உடல் நலம கெடல், அல்லது எதிரிகளால் அல்லது தன் மக்களால் கவலைகளுக்குளளாதல். புதனுல 11-ம் தேதி வரை குடும்பத்தில் மகிழ்ச்சி ஆனுல் இறுதியில் குடும்பத்தாருடன் கருத்து வேறுபாடுகளுக்குள்ளாதல்.

## விருச்சிகம்

(விசாகம 4-ம் பாதம் முதல், அனுஷம் கேட்டை முடிய)

ராகுவினுல் கருத்து வேறுபாடுகள், சனியினுல் பண நஷடம அல்லது கருத்து வேறுபாடு. குருவினுல் வெற்றி, பொருள் வரவு அல்லது தானிய வகைகள் கிடைக்கப்பெறல் அல்லது மதிப்புயர்தல் அல்லது குடும்பத்தில் மகிழ்ச்சி அல்லது மக்கட்பேறு. சூரியனுல் மாதத்தின் முதற் பகுதியின்போது பண வரவு அல்லது மதிப்புயர்தல், எதிரிகளை வெற்றி கொளல் ஆனுல் மாதத்தின் மறு பகுதியின்போது உடல் நலம் கெடல். செவ்வாயினுல் 19-ம் தேதி வரை பிள்ளைகள் மூலம் அல்லது தவருன வழியின் மூலம் பொருள் கிடைக்கப் பெறல், இறுதியில் உடல் நலம் கெடல் அல்லது தீயோரால் கவலைகளுக்குள்ளாதல். புதனுல் 11-ம் தேதி வரை புதிய நணபர்கள் ஆனுல் தன்னுடைய நடவடிக்கைகளின் காராணமாக தானே அருசுதல். ஆனுல் இறுதியில் குடும்பத்தில் மகிழ்ச்சி.

## தனுசு

(மூலம், பூராடம், உத்திராடம முதல் பாதம் முடிய)

ராகுவினுல் தவருன நடவடிக்கைகளில் ஈடுபடுதல். சனியினுல் எதிரிகளால் அல்லது உடல் நலம் கெடுவதால் கவலைகளுக்குள்ளாதல், தவருன நடவடிக்கைகளை மேற்கொளல். குருவினுல் உடல் நலல் கெடல் அல்லது பிரயாணம். சுக்ரனுல வீட்டில் மகிழ்ச்சி. சூரியனுல் மாததகின் முதல் 14 நாட்களின்போது பண நஷ்டம் அல்லது கண சம்பநதப்பட்ட நோயினுல் அவதியுறல் அல்லது மற்றவர்களால் ஏமாற்றப்படல் ஆனுல் மாதத்தின் மறுபகுதியின்போது பண வரவு அல்லது மதிப்புயர்தல். செவ்வாயினுல் எதிரிகளால் கவலைகளுக்குள்ளாதல் அல்லது உடல் நலம் கெடல் அல்லது ஏமாறறப்படல் அல்லது அலுவலகக் கவலைகள். ஆனுல் பின்னர் பண வரவு. புதனுல் 11-ம் தேதி வரை இகழச்சிக்குள்ளாதற்குரிய வாய்ப்பு, ஆனுல் இறுதி நாட்களின்போது பண வரவு, நணபர்கள் ஆனுல் தன் நடவடிக்கைகளின காரணமாக எழும விளைவுகளை நினைத்து அஞ்சுதல்.

## மகரம்

(உததிராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம 2-ம் பாதம் முடிய)

ராகுவினுல் பண நஷ்டம். சனியினுல் உற்ருர் உறவினர்களுடன் பிரிவு. குருவினுல் பண வரவு, குடும்பத்தில் மகிழசசி சுக்ரனுல் பண வரவு மற்றும் புதிய ஆடை ஆபரணங்கள் கிடைக்கப்பெறல். சூரியனுல் மாதத்தின் முதல் 14 நாட்களின் போது பிரயாணம் அல்லது உடல் நலம் கெடல் அல்லது பண நஷ்டம் அல்லது வயிற்றுக் கோளாறினுல் அவதியுறல். மாதத்தின் இறுதி 14 நாட்களின்போது பண நஷ்டம் அல்லது ஏமாற்றப்படல் அல்லது கண் சம்பந்தப்பட்ட நோயினுல் அவதியுறல். செவ்வாயினுல் அலுவலகக் கவலைகள் அல்லது கருத்து வேறுபாடுகள் அல்லது உடல் நலம் கெடல், ஏமாற்றப்படல். புதனுல் 11-ம தேதி வரை தவருன யோசனைகளைக் கேட்டதின் பேரில் பண நஷ்டம் அல்லது கருத்து வேறுபாடுகள், இறுதி நாட்களின் போது இகழ்ச்சிக்குள்ளாதல்.

## கும்பம்

(அவிட்டம் 3-ம் பாதம் முதல, சதையம், பூரட்டாதி 3-ம் பாதம் முடிய)

ராகுவினுல் கருத்து வேறுபாடுகள், சனியினுல் பிரயாணம், குருவினுல் மனயமைதி பறிபோதல், சுக்ரனுல் பண வரவு, புதிய நணபர்கள். சூரியனுல் பண நஷடம் அல்லது உடல் நலம் கெடல். செவ்வாயினுல் பண நஷ்டம், கண் சமபந்தப்பட்ட நோயினுல் அவதியுறல் அலலது மனைவிக்கு மனயமைதியின்மை. புதனுல் எதிரிகளால் கவலைகளுக்குள்ளாதல் அல்லது உடல் நலம் கெடல் அல்லது இகழ்ச்சிககுள்ளாதல்.

## மீனம்

(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உததிரட்டாதி, ரேவதி முடிய)

ராகுவினுல் பண வரவு. சனியினுல் உடல் நலமேன்மை, வெற்றி. குருவினுல் பண வரவு அல்லது வாகன வாய்ப்பு அல்லது ஆடை ஆபரணஙகள் கிடைக்கப்பெறல் அல்லது புதிய வீடு அல்லது மக்கட்பேறு. சுக்ரனுல் கருத்து வேறுபாடுகள், மதிப்புக் குறைதல். சூரியனுல் 14-ம் தேதி வரை மதிப்புயர்தல், அல்லது பண வரவு அல்லது வெற்றி அல்லது உடல் நலமேன்மை ஆனுல் இறுதி 14 நாட்களின்போது எடுககப்படும முயற்சிகள் தோல்வியடைதல். செவ்வாயினுல் 11-ம் தேதி வரை வெற்றி ஆனுல் பிறகு பண நஷடம, மனைவிக்கு மனயமைதியின்மை அல்லது கண சம்பந்தப்பட்ட நோயினுல் அவதியுறல் அல்லது உடல் நலம் கெடல். புதனுல் 11-ம் தேதி வரை பண வரவு அல்லது புதிய நண்பர்கள் அல்லது வாகன வாய்ப்பு அல்லது மக்கட்பேறு ஆனுல் இறுதி நாட்களின்போது எதிரிகளால் துன்பங்களுக்குள்ளாதல் அல்லது உடல் நலம் கெடல் அல்லது இகழ்ச்சிக்குள்ளாதல்.

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T.T.D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY, MANAGER, T. T. D. PRESS, TIRUPATI. 517501




திருமலை திருப்பதி தேவஸ்தான

## ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமி கோயில், திருமலை.

# ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

ஹாரத்தி (ஒவ்வொன்றுக்கும்) கட்டணம் ரூ 1

### ஸேவைகள் (ஸேவிப்பது மாத்திரம்)

| | | |
|---|---|---|
| சிறப்பு தரிசனம் | ரூ | 25 |
| தோமாலை ஸேவைக்குப்பிறகு தரிசனம் | ,, | 4 |
| அர்ச்சனை (ஸஹஸ்ரநாமம் அஷ்டோத்தரம்) பிறகு தரிசனம் | ,, | 4 |
| ஏகாந்த ஸேவைக்குப் பிறகு தரிசனம் | ,, | 4 |
| பூலங்கி ஸேவைக்குப் பிறகு தரிசனம் | ,, | 4 |
| திருமஞ்சனம் ஸேவைக்குப்பிறகு தரிசனம் | ,, | 4 |

### கைங்கர்யங்கள் (செய்து வைப்பது)

| | | |
|---|---|---|
| ஆமந்தரணோத்ஸவம் | ,, | 200 |
| பூலங்கி ஸேவை | ,, | 60 |
| திருமஞ்சனம் | ,, | 450 |
| கர்ப்பூரக் கிண்ணி | ,, | 250 |
| புனுகுச்சட்டம் கிண்ணி | ,, | 100 |
| கஸ்தூரிக் கிண்ணி | ,, | 100 |
| ஜாபாராக் கிண்ணி | ,, | 100 |
| ஸஹஸ்ர கலசாபிஷேகம் | ,, | 2500 |
| திருப்பாவாடை | ,, | 5000 |
| கோயிலாழ்வார் திருமஞ்சனம் | ,, | 1745 |

### உத்ஸவக் கட்டணங்கள்

| | | |
|---|---|---|
| வஸந்தோத்ஸவம் | ,, | 2500 |
| பிரம்மோத்ஸவம் | ,, | 750 |
| கல்யாண உத்ஸவம் | ,, | 1000 |
| ஊஞ்சல் சேவை | ,, | 1000 |
| தெப்போற்சவம் | ,, | 1500 |

### வாஹனங்கள்

| | | |
|---|---|---|
| ஸர்வபூபாலம் வஜ்ரகவச சேவை 72+1 (ஹாரத்தி) | ,, | 73 |
| ஸர்வபூபாலம், கல்பவ்ருக்ஷம், பெரிய சேஷவாஹனம் ஸூர்யப்ரபை, புஷ்பரதம், முத்துப்பந்தல், தங்கக்கருடவாஹனம் தனித்தனி 62+1 (ஹாரத்தி) | ரூ. | 63 |
| வெள்ளி கருடவாஹனம், ஹனுமந்த வாஹனம், சின்ன சேஷவாஹனம், குதிரை வாஹனம், ஸிம்ஹவாஹனம், ஹம்ஸ வாஹனம், சந்திரபிரபை யானை வாஹனம் தனித்தனி 32+1 (ஹாரத்தி) | ,, | 33 |

### பிரஸாதங்கள் (காலை சேவா தரிசனம் ஒன்றுக்கு)

| | | |
|---|---|---|
| ததியோதனம் | ,, | 40 |
| புளிஹோரை | ,, | 50 |
| பொங்கல் | ,, | 55 |
| சர்க்கரைப் பொங்கல் | ,, | 65 |
| ஸாகர்பாத் | ,, | 80 |
| கேஸரிபாத் | ,, | 90 |
| பாயஸம் | ,, | 85 |
| சீரா | ,, | 155 |

### படிகள் (படி ஒன்றுக்கு)

| | | |
|---|---|---|
| லட்டு | ,, | 455 |
| வடை | ,, | 250 |
| போளி | ,, | 220 |
| தோசை | ,, | 100 |
| ஸுகியம் | ,, | 200 |
| ஜிலேபி | ,, | 450 |
| அப்பம் | ,, | 230 |
| தேன்குழல் | ,, | 200 |

### நித்திய ஸேவைகள்

| | | |
|---|---|---|
| நித்திய கற்பூர ஹாரத்தி | ,, | 21 |
| நித்திய நவநீத ஹாரத்தி | ,, | 42 |
| நித்திய அர்ச்சனை | ,, | 42 |

குறிப்பு: ஸஹஸ்ர கலசாபிஷேகம் ஒவ்வொரு புதன்கிழமையும், திருப்பாவாடை ஒவ்வொரு வியாழக்கிழமையும் நடைபெறும்.
மற்றைய விவரங்களுக்கு கீழே கொடுக்கப்பட்டுள்ள முகவரியுடன் தொடர்பு கொள்ளுக.

செயலாட்சித் தலைவர்,
திருமலை திருப்பதி தேவஸ்தானம்,
திருப்பதி 517501

Regd. No. H TRP/12



திருப்பதிக்கு . . . . . . வருகை புரியுங்கள் !



# ஸ்ரீ கோதண்டராம சுவாமி கோயில் பிரம்மோற்சவம்

உற்சவ விவரங்கள்

| தேதி | கிழமை | பகல் உற்சவங்கள் | இரவு உற்சவங்கள் |
|---|---|---|---|
| 25—3—79 | ஞாயிறு | — | சேனுபதி உற்சவம் அங்குரார்ப்பணம் |
| 26—3—79 | திங்கள் | திருச்சி உற்சவம், துவஜாரோஹணம் | பெரிய சேஷ வாஹனம் |
| 27—3—79 | செவ்வாய் | சிறிய சேஷ வாஹனம் | ஹம்ஸ வாஹனம் |
| 28—3—79 | புதன் | முத்துப்பந்தல் வாஹனம் | ஸிம்ஹ வாஹனம் |
| 29—3—79 | வியாழன் | கல்பவிருக்ஷ வாஹனம் | சர்வபூபால வாஹனம் |
| 30—3—79 | வெள்ளி | பல்லக்கில் மோகினி அவதாரம் | கருட வாஹனம் |
| 31—3—79 | சனி | ஹனுமந்த வாஹனம் [மாலை-வசந்தோற்சவம்] | கஜ வாஹனம் |
| 1—4—79 | ஞாயிறு | ஸூர்யப்பிரபை வாஹனம் | சந்திரப் பிரபை வாஹனம் |
| 2—4—79 | திங்கள் | ரதோற்சவம் | குதிரை வாஹனம் |
| 3—4—79 | செவ்வாய் | பல்லக்கு உற்சவம், தீர்த்தவாரி அவப்பிரதோற்சவம் | திருச்சி - துவஜாவரோஹணம் |

இவ்விழா நாட்களின் போது மாலை நேரங்களில் ஊஞ்சல் சேவை நடைபெறும்.